


சிலம்பு உசு } திருவள்ளுவர் ஆண்டு ககூஅஉ, கார்த்திகை டிசம்பர், 1951 { பரல் ௬

# புலவராய்ப் புலவர்ப்போற்றிய புரவலர்

## திரு அ. முத்துசாமிக்கோனூர் அவர்கள்

(கி. பி. 1858—1944)

**ஊர்**

இப்பெருந்தகையார் பிறக்கும் பேறுபெற்ற திருவூர் கொங்குநாட்டுத் திருவூர் ஏழனுள் ஒன்ருகிய திருக்கொடிமாடச் செங்குன்றூராகும். இத்திருவூர் ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்தப் பெருமானுர் திருப்பதிகம் பெற்றுளது. அத்திருப்பதிகமும் தனிப்பெரும் சிறப்புவாய்ந்த தமிழ்ப்பதிக மாகும். அப்பதிகத்தின்கண் திருஆணையிட்டருளிய 'திருநீல கண்டம்' என்னும் திருமறையால் மெய்யடியார்கட்கே அன்றி அந்நாடு முழுவதுமே நெடுநாட்பற்றி வருத்திய பனிப்பிணி அகன்றொழிந்தது. இம்மறை இடர்நீக்கிப் படரும் நெறியொடு திடமுறு பேரின்பம் ஆக்கும் பெற்றியது. இது திருத்தொண் டத்தொகையின் முதலும் ஈறும் ஆளுடைய நம்பியார் திருவாய் மலர்ந்தருளிய சிறப்பினையுடையது. காஞ்சிப்புராணத்தின்கண் "நவில் ஓம் நீல கண்டாய நம என்று உரைக்கும் எட்டெழுத் தும்," என்று கிளந்தெடுத்து ஓதப்பெற்றது. இஃது இப் பொழுது திருச்செங்கோடு என வழங்கிவருகின்றது. இது சேலம் மாவட்டத்திலுள்ளது.

**பிறப்பு**

இத்திருவூரின்கண் வழிவழிச்சிறந்த ஆயர் குலத்தின்கண், மாதொருகூறன் மலரடிமறவாச் சீலந்தாங்கித் திகழ்ந்துள்ள அர்த்தநாரிக் கோனூர்க்கும், அவர்தம் முல்லைசான்ற முல்லையமை கற்புறு மனைவியார் காத்தாய் அம்மையார்க்கும் அருந்தவப்

பேற்றால் தோன்றியவர். இவர் பிறந்த பெருநாள் காளயுக்தி ஆண்டு (1858) ஆனித்திங்கள் ஞாயிற்றுக்கிழமை என்ப.

### இளமைக் கல்வி

சிறுபருவத்துத் திண்ணைப்பள்ளிக்கண் அமர்த்தப்பட்டார். அஞ்ஞான்று ஆசிரியராக அமைந்த தக்கார் திரு. பொன்னைய உபாத்தியாயராவர். இவர் வழிவழி மேற்கொண்டுவந்த ஊர்க் கணக்குடன் ஆசிரியத் தொழிலும் பூண்டுள்ளார்.

### பன்மொழிப் பயிற்சி

பிஜைஜய உபாத்தியாயர்பால் தெலுங்கு சமஃச்கிருதம் ஆகிய இருவேறு மொழிகளையும் துணைமொழியாக நன்கு கற்றனர். 'நவில்தொறும் நூல்நயம் போன்று' கற்குந்தோறும் கழி பேருவகை எய்திக் களிப்பர்.

### நெட்டுரு வன்மை

இளமைக்கண் இயல்பாகவே நெட்டுரு (மனப்பாடம்) வன்மைமிக்குடையராக இருந்தார். அதனால், எவரேனும் ஒரு வெண்பாப் பாடினால் அன்புகூர்ந்து மீட்டும் ஒருமுறை பாடுங்கள் எனத் தம் பணிவும் இன்சொல்லும் புலப்படக் கூறுவர். அவர்கள் கூறியதும் இவரும் உடன் ஒப்புவித்து வியப்புறச் செய்வர்.

### இசைப் பயிற்சி

பண்ணும் திறமும் பாணியும் (இசை, ராகம், தாளம்) முதலியவற்றைக் கண்ணுங்கருத்துமாகக் கற்றுச் சிறந்தனர். அம்மட்டோ வரிப்பாட்டுக்கள் (கீர்த்தனைகள்) பலவும் பாடினர். இயலும், இசையும், பாடும் புலமையும், நெட்டுரு வன்மையும், நாநலமும், நகைச்சுவையுண்மையும் வாய்க்கப்பெற்றவர். அதனால் பெருமக்கள் இவர்தம் சொல்லைக் கேட்டின்புறப் பெரிதும் விரும்புவர். இவரும் கூட்டுத்தொழுகை (பஜனை) களில் கலந்து ஆடியும் பாடியும் அறவுரை பகர்ந்தும் அவர்களை இன்புறச் செய்வர்.

### இலக்கியப் பயிற்சி

பழங்கதை வழியாகப் பழந்தமிழ்ப் பண்பாடுகள் ஆங்காங்கே வலியுறுத்திச் சொல்லப்பெற்றுள்ள பாரதம் இராமாயணம் என்னும் பின்னை இலக்கியங்களிலும், தனித்தமிழ்ப் பண்பாடும் அறமுறையும் சிறந்தோங்கும் உலகுக்கு ஒருநூலாம் திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்க மருவிய பெருநூல்களிலும், [நானெறிச்சிறப்பாம் நன்னெறி (சம

யம்) உண்மைகளை உருவகவாயிலாக உலகோர்க்குணர்த்துவது எளிதெனக்கண்ட முன்னோர் நற்பண்புகளை உருவகப்படுத்திக் கதை சொல்வாராயினர். அக்கதைகள் புராணமென வழங்குவவாயின. புராணமென்பது பழைமை எனப் பொருள்படும். அப்புராணங்களுட்] சிறந்த மச்சம், கூர்மம், இலிங்கம் முதலிய புராணங்களிலும் தெளிந்த பயிற்சியுண்டு.

## திருமுறைப் பயிற்சி

விழுமிய முழுமுதலுண்மை தொழுந்தகையார்க்கெல்லாம் அங்கைநெல்லி என விளங்கும்படியாகப் பரவுதலும், பொருளுண்மை போற்றலும், காதற்கசிவு மிக்கோங்கி ஓதற்கியைந்ததும், பண்ணொடு பயின்றதும், விண்ணவரும் மருள வியத்தகும் அருட்செயல்கள் இம்மண்ணிடைச் செம்பொருள் திருவருளால் நிகழ்தற்கு வாயிலாகியதும் ஆகிய திருமுறைகளிலும் சிறந்த பயிற்சியும் தேர்ச்சியும் உண்டு. மெய்கண்ட நூல்களாகிய சித்தாந்தப் பொருள்நூல்கள் பதினான்கின்கண்ணும் பயிற்சியும் பற்றும் மிக்குள்ளவர் .

## ஆற்றுப்படுத்தல்

நாடு செழித்தோங்கிய அந்நாளில் புலவர்கள் பலரும் பழுமரம் நோக்கிப் படரும் பறவைமான இவர்களை நாடி வருவர். அவர்கட்கு வேண்டும் வாய்ப்புக்கள் செய்தளித்து விருந்தோம்பி அன்பும் அறிவும், அருளும் ஆக்கமும், நன்பொருட் பயனை நாடிப் பெறும் நாட்டமும் மிக்குடைய செல்வப்பெருமக்கள்பாற் சேர்ப்பர். அச் செல்வர்களும் இவர்கள்தம் உண்மை உழைப்பும், உணர்வு மிகுதியும், ஒழுக்கமும், விழுப்பமும், வாய்மையும், தூய்மையும் நோக்கி அப் புலவர்களுக்கு வேண்டுவ உவந்தளித்து உயர்ந்தோங்கு பண்பின் ஒண்மையராவர். புலவர்களுக்கு இவர்கள் இருக்கையும் விருந்தும் உற்றுழி யுணர்த்தலும் பிறவும் செய்து வரும் சிறப்பால் அவர்கள் இவர்கள்பால் பேரன்பு பூண்டு இவர்கட்கு உயிரினும் சிறந்த கல்விக்கு உசாத்துணையாய் உரம்பெற்ற பைங்கூழ் போல் மிக்கு வளரத் துணை புரிவாராயினர். இவர்கட்குக் கேடில் விழுச் செல்வமாம் கல்வியும், கற்றார் நற்றுணையும் பீடுறப் பெருகுவவாயின. இவர்தம் உலையா முயற்சி களைகணுத் தலைநின்றோங்கிய புலமையும் ஆராய்வும் பெரும்புலவர்களையும் நட்பாய்ப் பிணித்து வியப்புறச் செய்தன. அதனால், கேளாதனவெல்லாங் கேட்டு ஆளாயினர். பாவன்மையும் படைத்து விரைந்து பாடித் தாவில் பெரும் புலவராயினர்.

**எண்பொருளோர்ப்பு (அட்டாவதானம்)**

அக்காலத்து யாழ்ப்பாணம் மேலைப்புலோலி மகா வித்துவான் நா. கதிர்வேற் பிள்ளையவர்கள் தமிழ்நாட்டில் பலவிடங்களிலும் விரிவுரையாற்றல், சொற்போரிடுதல், அவதானம் செய்தல், நூலுரையாக்கல், கற்பித்தல் முதலிய தமிழ்த்தொண்டு புரிந்து வருவாராயினர். இவர்கள் அவர்களிடம் பயின்று அட்டாவதானமும் கைவரப்பெற்றனர்.

**கல்லெழுத்தும் செப்பெழுத்தும் கைக்கொள்ளல்**

அரும்பொருள் கொடுத்துக் கல்லெழுத்தும் (சிலாசாசனம்) செப்புப் பட்டயமும் (தாம்பர சாசனம்) கிடைக்கும்போதெல்லாம் தொகுத்து வைத்துள்ளனர். அதன் பயனாக முடியுடைத் தமிழ் வேந்தர்கள் மடிமையின்றிக் கடல் தாண்டிக் கருந்தனத்துடன் பெருநிலமும் கைக்கொண்டு செங்கோலோச்சிச் சிறந்தனர் என்பதை இவர்கள் அரசியலார்க்குக் கொடுத்துதவிய கோராச கேசரியினுடைய செப்புப் பட்டயத்தால் உலகுணர்ந்துவக்க நேர்ந்தது. இவ்வுண்மை அப்பொழுது வெளிவந்த சேலம் மாவட்டத்தரசியல் வெளியீட்டில் (சில்லாக் கெசட்டு) வரையப் பெற்றுள்ளது.

**ஒப்புரவுத் தொண்டு**

திருச்செங்கோட்டு மேற்கு வீதியில் ஒரு பெரிய கட்டிடத்தைச் சைவசமய வளர்ச்சிக்கெனச் சைவசமாசத்துக்கு நன்கொடையாக நல்கினர். இதன்கண் சிவஞானப் புத்தகோசம் எனப் பெயரிய ஒரு நூல் நிலையத்தை நிறுவி நன்கொடையாகப் படிக்க உதவினர். சமாச ஆண்டு நிறைவுநாட்களில் தமிழ்நாட்டில் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராய் ஆராய்ச்சித்திறன் மிக்காராய் விளங்கிய திரு. காசிவாசி செந்திநாத ஐயரவர்கள், சித்தாந்த சண்டமாருதம் சோமசுந்தர நாயக்கரவர்கள், சித்தாந்த சரபம் பூவை, கலியாணசுந்தர முதலியாரவர்கள், J. M நல்லசாமிப் பிள்ளையவர்கள் முதலிய பல பெரும்புலவர்கள் வந்து செந்தமிழும் சிவநெறியும் சிறக்க இரண்டு மூன்று நாட்கள் மக்கள் மனங்கொண்டுய்ய விரிவுரை யாற்றுவார்கள். இதைத் தொடர்ந்து திருக்கோவில் சிறப்பு நாட்களிலும், ஏனைய நோன்பு (விரதம்) நாட்களிலும் தாமே விரிவுரையாற்றி மக்கள் கேட்டு நன்னெறிச் சென்று வாழ உறுதுணையாவர்.

**வரித்தொண்டு**

இயல் இசை வல்லராகிய இவர் பலர் வேண்டுகோளுக்கிணங்க வரிப்பாட்டு (கீர்த்தனை) வடிவில் அமர்நீதி நாயனார் திரு

வரலாறு, சண்டன் சரிதம் (பிரமோத்திர காண்டத்திலுள்ளது) புரந்தரதாசு, சக்குபாய் சரிதங்கள் முதலியவற்றை ஆக்கித் தாமே இசையரங்குகளில் எல்லாரும் வியந்து மகிழ்ந்து பாராட்ட நிகழ்த்திப் பேறு பெற்றனர்.

சிவ பராக்கிரமமான இரவிதேவி நாடகம் இயற்றி நடித்தும் நடிப்பித்தும் நானிலம் வாழ நல்கினர்.

### அச்சகமும் வெளியீடும்

சித்தூர் பெருநிலக்கிழார் (மிட்டாதார்) திருவாளர் S. M. சுப்பராயக் கவுண்டர் அவர்களின் பெரும் பொருள் துணையால் "விவேக திவாகரன்" என்னும் அச்சகமும், 'விவேக திவாகரன்' என்னும் கிழமை வெளியீடும், கொங்குவேள் பத்திரிகையும் துவங்கிச் சிறப்புற நடத்தி வந்தனர். இதனால் நற்றமிழும் நானெறியும் மேனிலை எய்தின. இவர்தம் அரும் பெரும் கொள்கை எளிதாக எங்கணும் பரவுவதாயிற்று; பலரும் பயன் பெற்றனர்.

### பொன்னும் புகழும் மன்னுதல்

இவர்தம் திருத்தொண்டை நோக்கிக் கழி பேருவகை எய்திய கடப்பாட்டாளரும் இராமநாதபுரம் சேதுபதி மன்னரும் ஆகிய திரு. பாற்கர சேதுபதி அவர்கள் ஆயிரம் ஆயிரமாக இருமுறை உதவிப் பொன்னுடையும் நற்சான்றிதழும் நல்கி ஊக்கினர். இஃதன்றே அறிந்து கொடுக்கும் அரும்பண்பு!

திருவாவடுதுறைத் திருமடத் தலைவர் மறைத்திரு. அம்பலவாண தேசிகத் தம்பிரானவர்கள் இவர்களை வரவழைத்துப் பெரிதும் பாராட்டிப் பொன்னுடை போர்த்துப் பொலிவித் தருளினர்.

### ஆக்கிய நூல்கள்

௧. திருச்செங்கோட்டு மான்மியம், ௨. திருப்பணி மாலை, ௩. மும்மணிக் கோவை, ௪. ஒருபா ஒருபஃது, ௫. அர்த்த சிவாம்பிகை நவகம், ௬. செங்கோட்டு வேலவர் பஞ்சாமிர்தம், ௭. சங்ககிரி சென்னகேசவப் பெருமாள் ஊஞ்சல், ௮. பழைய கோட்டை சண்டிகேசுவரி பதிகம் ஒன்று, இரண்டு, ௯. கொங்கு மண்டல சதகம் உரை ஆராய்ச்சி முதலியன.

### அச்சியற்றப் பெற்றவை

௧. கொங்கு நாட்டு ஊர்த்தொகை, ௨. மங்கல வாழ்த்து, ௩. வாழி, ௪. அர்த்த நாரீசுவரர் மாலை, ௫. கருணாகர மாலை,

௯. செங்கோட்டு மாலை, ௭. சிவமலைக் குறவஞ்சி, அ. சிவமலைப் புராண உரை, ௯. அபிசேக மாலை, ௧0 திருச்செங்கோட்டுப் புராணம், ௧௧. திருச் செங்கோட்டுக் கலம்பகம், ௧௨. திருச் செங்கோட்டுப் பிள்ளைத் தமிழ், ௧௩. அர்த்த நாரீசுவரர் பதிகம், ௧௪. மோரூர் பாம்பலங்கார வருக்கக் கோவை, ௧௫. கபிலமலைக் குழந்தைக் குமரர் வருக்கக் கோவை, ௧௬. மல்லசமுத்திரம் சோழீசுவரர் மல்லை மாலை முதலியன.

திருத்தொண்டு

திருச் செங்கோட்டிலுள்ள திருக் கோவிலில் திருவுலாக் கொண்டருளும் ஐம்பெரும் எழுந்தருள் திருவுருவங்களில் ஒன்றாகிய சண்டேசுரர் திருமேனி அமைத்தளித்தனர். பிருங்கி முனிவர் திருவுருக்கண்டு நாட்டினர். அர்த்த நாரீசுரர் மலைக்குச் செல்பவர்கட்கு வழித்துணையாய் அமையும்படி கற்றூண் இருப்புத்தூண் நிறுவி விளக்கேற்றுவிக்கச் செய்தனர். நாற்சந்திகளில் பளிங்கு (குளோப்பு) மூடி விளக்குகள் அமைப்பித்தனர். மாரியம்மன் கோவிலில் முத்து விநாயகர் நாட்டுதல் (பிரதிட்டை) செய்தார். விசய ஆண்டில் பித்தளையில் உச்சித் திருக்குடம் அமைத்தனர்.

திருச் செங்கோட்டுத் திருக்கோவில் அறநிலை மதிப்புமிகு மேலாளராகவும் சங்ககிரி அறநிலைக் காப்பாளராகவும் பணியாற்றும் பொறுப்பு நல்கப் பெற்றது. அப்பணியினைச் செவ்வையாகச் செய்து செந்நெறிச் செல்வர் பாராட்டும் சீரும், திருவருட்பேறும் பெற்றுத் திகழ்ந்தனர்.

பேராவியற்கைப் பெருவாழ்வு

2—11—1944, விடியற்காலை ஒரு மணிக்குச் சிவனடி நீழலெய்திப் பேரின்பமுற்றனர்.

மனையறம் புரிந்து மாண்புறு நிலை எய்திய இவர்கட்கு முதல் மனைவி மகப்பேறின்றி வயங்கினர். இரண்டாம் மனைவி தாய் என்னும் பழனி அம்மாளுக்கு ஆண்மக்கள் அறுவரும் பெண்மகள் ஒருத்தியும் உளர். இச் சிவநேயச் செல்வர் செய்து போந்த சீரியமுறைகளைத் தமிழுலகம் மேற்கொண்டு ஒழுகி உய்யுமாக. ஆண்டவன் திருவருள் புரிவானாக.

செங்கோட்டுச் செல்வனும் சீர்முத்து சாமிக்கோன்
இங்காற்றும் தொண்டெவர்க்கும் ஏர்படியாம்—பொங்கு
திருமுறையும் மெய்கண்ட நூல்முதலா ஓதி
மருவாரின் றுன்சிவன்தாள் மன்.

—இதழாசிரியர்.

# சிவஞானபோதம் தனித்தமிழ் முதல்நூல்

## மாதவச் சிவஞானமுனிவரர் திருவுள்ளம்?

"உணர்உரு அசத்தெனின் உணரா தின்மையின்
இருதிறன் அல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே."

இதன் பொருள் : உணர் - அளவைகளான் அறியப்படும்; உரு - (முதற்பொருள்) பிழம்பு; எனின் - இயல்பிற்று என்று கூறுவோமெனின்; அசத்து - (அங்ஙனம் அறியப்படும் உலகுடல் உண்பொருள்கள்போல) அழிபொருள் ஆம்; உணராது - எவ்வாற்றானும் அறியப்படாத இயல்பிற்று; எனின் - என்று கூறுவோமெனின்; இன்மை - (முயற்கோடு முதலியன போலப்) பாழாம்; இருதிறன் - இவ்விருவகையும்; அல்லது - அல்லாமல்; இரண்டுவகையின் - (ஒருவாற்றான் அறியப்படுதலும் ஒருவாற்றான் அறியப்படாமையும் ஆகிய) இரண்டுவகையானும்; சிவசத்தாமென இசைக்கு மன்உலகு - சிவசத்தாமெனக் கூறுவர் மெய்யுணர்வின் நிலைபெற்றுயர்ந்தோர்.

சிவம்: மருளாக்கமாகிய மாயா கருவிகளைக் கொண்டுணரும் உணர்வினாலும், ஆவியின் சிற்றுணர்வாலும் அறியப்படாதது.

சத்து: திருவருள் கருவியாகக் கைவரும் மெய்யுணர்வு கொண்டு உணரப்படுவது. சிவசத்து - சிவமாகிய சத்து.

முனிவனார் தடைவிடைகளான் பிறண்டும் வடமொழிச் சூத்திரத்துடன் முரணாமை அமைத்துக்காட்டுவதுபோல் ஈண்டும் காட்டப்புகுந்தருளினர். அங்ஙனங் காட்டலுறின் சூத்திரப் பொருள் மயக்கத்துக்கு இடமாய்க் கருதிய பொருள் வலியுறுத்தும் வாயிலின்றிக் கொன்னே கழிவதுகண்டு, தனித்தமிழ்ச் சூத்திரமே வலியுடைத்தென வாய்மொழிந்தருளினர். இம்மெய்யுரை ஒருபாற்கோடாது நடுநின்றாயும் நற்பண்புவாய்ந்த நல்லோர் எவர்க்கும் உளங்கொண்டொழுகத் தக்க ஒண்மை உரையே. முனிவனார் வெளிப்படக்கூறாது உய்த்துணரவைத்தருளியதூஉம் நூற்புணர்ப்(உத்தி)பேயாம். அல்லதூஉம் காலம் இடம் நோக்கிக் குறிப்பின் உணர்த்தும் சிறப்புமாம்.

அவ் அருளுரை: "அஃதங்ஙனமாக; ஆசிரியர் ஆறாஞ் சூத்திரத்தோதியவாறே "உணருருவசித்து" எனச் சூத்திரஞ் செய்யாது உணருருவசத்து எனச் சூத்திரித்தது முதனூலோடு முரணும் பிறவெனின்,—முரணாது; அசத்தெனவே சடம் என்பதுந் தானே போதருமென்னுங் கருத்தான் அவ்வாறு சூத்திரித்தாராகலா னென்க. அக்கருத் துணர்ந்து கோடற்

கன்றே 'அறிபொருளசித்த சத்தாம்' எனக் கூட்டியுரைத்தார் வழிநூலாசிரியரும். அற்றேல், அம்முறைமைபற்றி அசித்தெனவே அசத்தென்பதும் தானே பெறப்படுமென்னுமோவெனின்,—என்னும்; என்னை? அசித்தாகிய மலமாயை கன்மங்கள் நீர்மேலெழுத்து முதலியனபோல நிலைபெறுவன போலக் காட்சிப் புலனாய்த் தோன்றிச் சடிதியின் மறைந்துபோமசத்தாதலின்மையின், என்றும் ஒருதன்மையனாகிய முதல்வனை நோக்க அசத்தெனப்படுமாயினும் அங்ஙனந் தோன்றி மறைவதாகிய பிரபஞ்சத்தை நோக்கச் சத்தேயாமாகலிற் சிறப்புவகையான் உணருருவாகிய அசத்துப் பொதுவகையான் உணருருவாகிய சடத்தின் வியாப்பியமாவதன்றி வியாபகமாதலின்மையானென்றொழிக. ஈண்டு அசத்தென்றற்குப் பக்கங் காரியப் பிரபஞ்சமாத்திரையே என்பது வருஞ்சூத்திரத்திற் காட்டுதும்."

அசித்தென்பது, அறிவில்லாதது. அசத்தென்பது, தோன்றி மறைவதாகிய அழிவுள்ளது. கட்புலனாகா உருவுள்ளதாய்க் காரணமாய்ப் பொதுவியல்பாயுள்ள மலமாயை கன்மங்கள் அறிவில்லாதவையே அன்றி அழிவுள்ளவையன்று; அழிவில்லாதவையே. கட்புலனும் உருவுள்ளதாய்க் காரியமாய்ச் சிறப்பியல்பாய் உணரப்படும் உலகுடல்கள் அறிவில்லாதவை மட்டுமன்றி அழிவுள்ளவையுமாகும். ஈண்டுத் துணி (பக்கம்) பொருள் உலகுடல்களே. சிறப்புப் பொதுவினுள் அடக்கம். சிறப்பியல்பு கூறின் பொதுவியல்பு தானே பெறப்படும். பொதுவியல்பு கூறின் சிறப்பியல்பு எவ்வாற்றானும் பெறப்படாது. பூ பொதுவியல்பு; கொன்றைப்பூ சிறப்பியல்பு. இவைபோலவே, அசித்துப் பொதுஇயல்பு; அசத்துச் சிறப்பியல்பு. முனிவனார் தாம் அருளிய பேருரையில் தமிழ்ச் சூத்திரம் முரணுவதோடு முதன்மையும் வாய்மையுமாமென வலியுறுத்தினமையின் "சிவஞானபோதம் தனித்தமிழ் முதல்நூலே" என்பது குறிப்பிற் போந்த நெறிமுறை தவறா நேர்மையுரையாமென்றோர்க.

இனியன்.

## திருக்குறள் அட்டாவதானம்

### திரு. தி. ப. சுப்பிரமணியதாசு அவர்கள்

இப்பெரியார் நம்மை விட்டகன்று பேராவியற்கைப் பேரின்பம் எய்தினமையும் அவர்தம் அரிய பெரிய வரலாறும் நம் செல்வி சிலம்பு உசு, பரல் ரு - பக்கம் கoடு-இல் வெளிவந்துள்ளன. அப்பொழுதே அவர்கள்தம் திருவுருவப் படத்தைச் சேர்த்து வெளியிடமுயன்றும் கைகூடவில்லை. அதனை இப்பொழுது இதனுடன் வெளியிடுகின்றோம்.



திருக்குறள் அட்டாவதானம்

திரு. தி. ப. சுப்பிரமணியதாசு அவர்கள்

தோற்றம் : 1878. மறைவு : 1951.

# தமிழ்த்தாய்க் கொலை

[கணியர், டாக்டர் திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

(செல்வி—சிலம்பு ௨௬; பரல் ௧ பக்கம் ௧௮-ன் தொடர்ச்சி)

**தமிழ் மக்களே! விழித்தெழுங்கள்.**
**உங்கள் தாயைக் காக்க ஓடிவாருங்கள்.**

## எழுத்துமாற்றம் செய்ய எந்த அரசாங்கத்துக்கும் உரிமையில்லை

**"தாய்க்கொலை சால்புடைத்து" என்பாரும் உண்டு**

"தாம் வாழ்வது தமிழ்நாடு; உண்டு மழலையாடி வளர்ந்தது தமிழ்த்தாயின் பால்; தாம் உயிர்வாழ்வது தமிழ் அமுது பருகி; தாமும் தம் மனைவி மக்களும் பிழைப்பது தமிழைப் பேசி, எழுதி," என்ற உண்மைகளையெல்லாம் உணர்ந்திருந்தும் சிலர் அத்தாயை அழிக்கப் பல்லாற்றானும் முற்படுகின்றனர். அதற்குக் காரணம், "தாம் தமிழர் அல்லர், ஆரியரே. ஆரியர்க்கு உரியது சம்ஃச்கிருதம். அது அழிந்து ஒழிந்து சிதைந்துவிட்டதுபோலத் தமிழையும் அழித்து ஒழித்துவிடவேண்டும்," என்ற தவறான எண்ணம் அவர்கள் நெஞ்சிற் பதிந்து உறுத்தி வருவதுதான். இங்ஙனமாய கருத்துக்கொண்டு சில எழுத்தாளர் இனிய எளிய தமிழ்ச்சொற்கள் பல இருப்பவும் அவைகளையெல்லாம் விடுத்து வடசொற்களை வேண்டுமென்றே புகுத்திப் பேசவும் எழுதவும் செய்கின்றனர். பண்டைத் தமிழர் வழிவழிவந்த சிலருங்கூட அங்ஙனம் மயங்கிச் சம்ஃச்கிருதச் சொற்களைப் புகுத்தி எழுதுதலும் பேசுதலுமே தமக்குப் பெருமையென்று எண்ணுகின்றனர். இப்படியாகச் சிலர் தெரிந்தும் தெரியாமலும் தாய்க்கொலை செய்ய முற்பட்டிருக்கின்றனர்.

"தாயை அடித்துக் கொல்பவருக்கும் ஊரிற் பாதி" என்ற பழமொழிக்கு ஏற்பப் பலர் இவருடன் நட்புக்கொண்டு இவர்களை ஆதரிக்கின்றனர்; ஆனால் உண்மை புலனாகும்போது திருந்தியவர் பல்லோர் உள்ளனர்.

**தமிழன்பர் மாநாடு**

தமிழராயின் தமது பெருங்கூட்டத்தை **மாநாடு** என்பர்; தமிழ் அன்பர்களாதலின், தமது கூட்டத்தை **மகாநாடு** என்று தான் கூறுவார்கள். சென்னை மாகாணம் என்பதைத, 'மகா

காணம்' என்று அவர்கள் கூறுதிருப்பது ஏனே? தமிழ் அன்பர் மாநாடு ஒன்று 1933 திசம்பர் 23, 24உ களில் சென்னையில் நடைபெற்றது; அது, "தமிழின் இலக்கணவரம்பை அழிக்க வேண்டும்; பல சம்ஃஃச்கிருதச் சொற்களைக் கண்டபடி தமிழோடு திணிக்கவேண்டும்; சம்ஃஃச்கிருத எழுத்துக்களையும் ஆங்கில எழுத்துக்களையும் தமிழ் எழுத்துக்களோடு புகுத்தவேண்டும்; இதனால் தமிழ்த்தாயைக் கொலைசெய்து தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்ற பெயர்களோடு புலம்பித் தவிக்கச்செய்து விட்டோம்; மிச்சம் இருக்கும் இச்சிறு தமிழ்நாட்டில் வழங்கும் தமிழையும் தொலைத்துக்கட்டுவோம்; இந்த மகாநாட்டில் 'தமிழ் அன்பர் சங்கம்' என்று ஒன்றை அமைத்து அக்கருத்துக்களை நிறைவேற்றப் பாடுபடுவோம்," என்ற புனிதமான கருத்துடன் தொடங்கப்பெற்றது. இதிலே பெரிய பெரிய அதிகாரிகள், செல்வவான்கள் யாவரும் ஒன்றுசேர்ந்து திரண்டனர். உண்மையறியாத பல தமிழ்ப்பெரியார்களும் இதிலே கலந்துகொண்டார்கள். ஆனால், தமிழ்த்தாய் இத்தீய சூழ்ச்சியைத் தன் அருமை மக்கள் சிலருக்கு உள்ளே இருந்து உணர்த்தியருளினாள். உடனே நெஞ்சு பொறுக்காமல் தமிழர் பலர் திரண்டு எழுந்தனர்; அம் மாநாட்டிற் புகுந்தனர்; பெருங் கிளர்ச்சி செய்தனர்; சூழ்ச்சியை அறியாது அம்மாநாட்டிற்குத் தலைமை தாங்கச் சென்றிருந்த கல்வி மந்திரி திருவாளர் குமாரசாமி ரெட்டியாரவர்கள் தலைமைதாங்கும் வேளையிலே உண்மையை அறியும்படி செய்தார்கள். உடனே அம்மாநாட்டினுடைய போக்கே வேறாக மாறிவிட்டது; சூழ்ச்சி அம்பலமாயிற்று; மாநாடு தமிழர் மாநாடேயாயிற்று; தமிழ் அன்பர் சங்கம் உருப்பெறாது ஒழிந்தது. அம்மாநாட்டின் வரவேற்புக் கழகத் துணைத்தலைவராக இருந்து பாடுபட்ட திரு. C. R. சீனிவாச ஐயங்கார் (அப்போது சீனிவாச ஐயங்கார், இப்போது சீனிவாசன்) அவர்கள் நெஞ்சம் கலங்கித் தவித்திருந்தனர். அவருக்கு இப்போது தமிழ்வளர்ச்சிக் கழக மேடை கிடைத்தவுடன் அதிலும் அதன் யாழ்ப்பாண மாநாட்டுத் தலைமை கிடைத்தவுடன் தலைமையுரையிலே பின்வருமாறு வாய்விட்டுப் பேசுவாராயினர் :—"பிரும்மாண்டமான கூட்டம். என்றும் அறியாத பிரதிநிதித்துவம் வாய்ந்த கூட்டம். உற்சாகம் கரைபுரண்டு ஓடிற்று. ஆனால் பொங்கியெழுந்த மறுமலர்ச்சிப் பானையில் ஒருதுளி விஷம் கலந்துகொண்டது. யாரையும் நான் குறை கூறவில்லை. ஆசை மேலீட்டால் ஒரு சிலருக்கு அசூயை முற்றி விட்டது. தமிழ் அன்பர்களாக அன்று நடித்தவர்கள் கள்ளக் காதலர்களோ என்ற சந்தேகம். சந்தேகாத்மா வினச்யத. சந்தேகத்தில் பிறந்தது, சந்தேகத்தில் அழிந்தது. விரஸமில்லா

மல் கூட்டம் முடிந்தது. கண்ட லாபம் அவ்வளவுதான். ஆக்க மளிக்கக் கூடியவர் உடும்பு பிடித்த கதைபோல் ஒதுங்கிவிட்ட னர். வேளை வரவில்லை. சங்கல்ப சுத்தியில்லை. அரிய சந்தர்ப் பம் சரிந்துவிட்டது. ஆனால் அடிவேகம் குறையவில்லை.''

மேலேகண்ட பேச்சைப் பாருங்கள்; படித்துப் பாருங்கள். உண்மை புலனாகின்றதா? தமிழ் அன்பர் மாநாட்டு வரவேற்புத் துணைத்தலைவராக இருந்த இவர் தமிழ் வளர்ச்சிக் கழக மாநாட் டுத் தலைமைபெற்றார்; பெற்ற மகிழ்ச்சியில் உண்மையை உள்ள படி பேசிவிட்டார். அடிவேகம் குறையவில்லை என்பதை வெளிப்படுத்திவிட்டார்.இவ்வுண்மையை உணர்ந்து உண்மைத் தமிழ் மக்கள் தம் தாயைப் பாதுகாக்க முன்வராமலிருப்பார் களா? வந்தே தீர்வார்கள். அப்போது குறையாத இந்த அடிவேகம் எங்கே கொண்டுபோய் விடுமோ? தமிழ்த் தாய் தான் முடிவினை அறிவாள்!

**சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம்**

தமிழன்பர்களாய் நடித்த கள்ளக் காதலர்களுடைய சூழ்ச்சி அன்று சிதைந்து ஒழிந்தது. தமிழ்த்தாய் மக்கள், மெய்யான தமிழர் அன்று திருநெல்வேலியில் ஒரு பெரிய தமிழர் மாநாட்டைக் கூட்டினர். பல்லாயிரக்கணக்கான மக்கள் கொல்லம் 11(9 வைகாசி 28, 29உ(10, 11-6-1934) ஞாயிறு திங்கட்கிழமைகளிலே நெல்லைமாநகரில் திரண்டு கூடினர். "தமிழ்த்தாய் இனி வாழ்ந்தாள், அம்மையை உருக்குலைக்கவோ வேறு ஊறு செய்யவோ இனி முடியாது, முடியாது; சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் தோன்றப்போகிறது; இனிக் கவலை இல்லை,'' என்ற உள்ளக் கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் கரை புரண்டு தலைநிமிர்ந்தெழுந்த தமிழர் நெஞ்சிலே என்றும் காணாப் புத் துணர்ச்சியை ஊட்டின. சைவர், வைணவர், கிறித்தவர், மக மதியர் ஆகிய சமயத் தலைவர்களும், காங்கிரசு, நீதிக்கட்சி, சுய மரியாதைக் கட்சி முதலிய அரசியல் தலைவர்களும், பிராமணர், வேளாளர் முதலிய சாதித் தலைவர்களும் தமிழ்த்தாய் வயிற்றுப் பிள்ளைகள் தாம் அனைவரும் என்பதை உணர்ந்து ஒன்று கூடி யிருந்தனர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரா சிரியராகத் திகழ்ந்த நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்கள், எம். ஏ., பி. எல்., வேண்டிக்கொள்ள உத்தமபாளையம் பெரு நிலக்கிழவரும் அரசியல் வளர்நெறி மந்திரியுமாகிய பாரித்தர் பொன்னம்பல தியாகராசன் அவர்கள், எம். ஏ., பார்-அட்-லா, மாநாட்டைத் தொடங்கி வைத்தார்கள். தனித்தமிழ் வளர்த்த செந்தமிழ்ப் புரவலர் த. வே. உமாமகேசுவரன் பிள்ளையவர்கள், பி. ஏ., பி. எல்., மாநாட்டுத் தலைமை தாங்க, தனித் தமிழ்க்

கிளர்ச்சித் தந்தையாராகிய மறைமலையடிகளார் புலவர் மாநாட்டுத் தலைமைதாங்க 11-6-1934 திங்களன்று "சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம்" தோன்றுவதாயிற்று. 28-7-1934-ல் அது பதிவு செய்யப்பெற்றது. பல்கலைப்புலவர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், எம். ஏ., எம். எல்., சங்கத்தின் முதல் தலைவராக ஆயினர்; தமிழ்ப் பெரியார் செ. தெ. நாயகம் அவர்கள் துணைத்தலைமை தாங்கினார்கள். தமிழன்பர்கள் இம் மாநாடு நடைபெறுதும் சங்கம் தோன்றுதுமிருக்கத் திருநெல்வேலியில் வந்திருந்து செய்த சூழ்ச்சிகளெல்லாம் சிதைந்து கெட்டன. ஏனெனில் இச்சங்கம் சாதி சமய வேறுபாடு சிறிதும் இல்லாமல் தமிழ்வளர்ச்சி ஒன்றே உண்மையான நோக்கமாகக் கொண்டு தோன்றியதாதலால் தமிழ்த்தாய் இதனைத் தன் கண்ணேபோல் போற்றி வளர்க்கத் தொடங்கினாள். மெய்யன்பர் திருவரங்கம் பிள்ளை யவர்களாலே தோற்றுவிக்கப்பெற்ற சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் பல்லாண்டு அதன் தலைவராகவும் மாகாணத் தமிழ்ச்சங்கத் தலைவராகவும் விளங்கிய சித்தாந்தப் பேராசிரியர் மா. வே நெல்லையப்ப பிள்ளையவர்களும் இச் சங்கத்துக்கு உடலும் உயிருமாக விளங்கினர்.

இச் சங்கமே செப்புப் பட்டயத்துடன் "கவிமணி" என்ற பட்டத்தை மெய்யான கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளையவர்களுக்கு வழங்கியது. திருவாளர்கள் மகா மகோபாத்தியாய கதிரேசச் செட்டியாரவர்கள் "முதுபெரும் புலவர்" என்றும், வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் "பெருங்கவி" என்றும், வேங்கடசாமி நாட்டாரவர்கள் "நாவலர்" என்றும், தி. இலட்சுமணப் பிள்ளையவர்கள் "இசைக் கவியரசு" என்றும், கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் "பல்கலைப் புலவர்" என்றும், கோ. ம. இராமச்சந்திரன் செட்டியாரவர்கள் "செந்தமிழ்ப் புரவலர்" என்றும் பட்டம் பெற்றார்கள்.

1941-ல் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தார் நடத்தித்தந்த சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் எட்டாவது மாநாட்டிலே சங்கம், செட்டிநாட்டரசர் அண்ணாமலைச் செட்டியாரவர்களுக்குப் "பல்கலைவள்ளல்" என்ற பட்டத்தைப் பட்டயத்துடன் தருமபுரம் ஆதீனம் தெய்வத்திரு பண்டாரச் சன்னிதியார்களைக் கொண்டு வழங்கிப் பாராட்டியது. இச் சங்கத்தின் புரவலராக இன்று இந்திய உள்நாட்டு மந்திரி கனம் இராசகோபாலாச்சாரியாரவர்களும் முன் நிதி மந்திரி ரா. க. சண்முகம் செட்டியாரவர்களும், காப்பாளராக முன் சென்னை மந்திரி முத்தைய முதலியாரவர்களும் இன்று சென்னை முதன் மந்திரி பு. ச. குமாரசாமிராசா அவர்களும், அண்ணாமலைப் பல்கலைக் கழ

கப் பேராசிரியர் சிதம்பரநாதன் செட்டியாரவர்களும், தினசரி ஆசிரியர் சொக்கலிங்கம் பிள்ளையவர்களும், ஆயுள் உறுப்பின ராகச் சென்னைச் சட்டசபைத் தலைவர் சிவசண்முகம் பிள்ளை யவர்களும், டாக்டர் திருமூர்த்தி ஐயரவர்களும், தொழிலாணைக் கழகம் (Service Commission) தலைவர் நாராயணசாமிப் பிள்ளையவர்களும், சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் சேதுப்பிள்ளையவர்களும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மணவாள ராமானுச மவர்களும் இன்னோரன்ன பலப்பல மெய்த்தமிழ்ப் பெரியார்களும் இருந்து வருகின் றார்கள்.

**கலைச் சொல்லாக்கம்**

ஆங்கிலக் கலைச்சொற்களுக்கு ஏற்ற தமிழ்க்கலைச் சொற் களை ஆக்கவேண்டும் என்று திரு. கிருஃச்ணராவ் பான்சிலே யவர்களைச் செயலாளராகக் கொண்ட கலைச்சொற்கழகம் 1930-க்கு முன் அரசினரால் அமைக்கப்பட்டது. அதில் உல கப் புகழ்த் திரு. பா. வே. மாணிக்க நாய்க்கரவர்களும், பல் கலைப் புலவர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களும் இருந்தார் கள். அக்கழகத்தில் தமிழ்ப்பகைவர்கள் சிலர் மிகவும் செல் வாக்குடன் இருந்தார்கள்; அவர்கள் தமிழ்க்கலைச் சொற்கள் என்ற பெயரால் சம்ஃச்கிருதக் கலைச்சொற்களை ஆக்கவேண் டும் என்று முனைந்தார்கள்; அதனை எதிர்த்துப் போராடியும் பயன்விளையாமையினாலே மேலே குறித்த தமிழ்த்தலைவர் இரு வரும் உண்மையை வெளியிட்டு அக் கழகத்தைவிட்டு வெளி யேறினார்கள். அதனால் நூற்றுக்கு எண்பத்துநான்கு (84%) சொற்கள் சம்ஃச்கிருதச் சொற்களாக அக்கழகம் அமைத்தது. அதனால் நல்ல தமிழ்ச்சொற்களை ஆக்கவேண்டும் என்று தமிழர்மாநாடு நிறைவேற்றிய தீர்மானத்தின்படி சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் தக்க புலவர்களைக் கொண்டு பல கலை களுக்கும் சொற்களை ஆக்கித் "தமிழ்த்தாய்" என்ற தனது முத் திங்கள் வெளியீட்டில் அச்சிட்டு இசைக் கவியரசு இலட்சுமணப் பிள்ளையவர்கள் தலைமையில் இரண்டு மாநாடுகள் கூட்டிச் சொற் களை முடிவு செய்து திருப்பனந்தாள் திருமடத்தின் தலைவரவர் களால் அச்சிட்டுப் பல கல்விநிலையங்களுக்கும் அனுப்பித் திருத்தங்கள் பெற்று மூன்றாவதாகச் சென்னையில் ஒரு பெரிய மாநாடு கூட்டிற்று; திருவாங்கூர்த் திவான் சி. பி. இராமசாமி ஐயரவர்கள் தொடங்கிவைக்க அருட்டிரு விபுலானந்த அடிகள் தலைமை தாங்கினார்கள். சென்னைப் பல்கலைக் கழகமும், தென் னிந்திய ஆசிரியர் சங்கமும், இலங்கை அரசாங்கமும் தக்கபுலவர் களை மாநாட்டுக்கு அனுப்பி உதவின. திருவாளர்கள் சக்கர

வர்த்தி இராசகோபாலாச்சாரியாரவர்கள், மாகாண ஆசிரியர் சங்கத்தலைவர் சபேசஐயரவர்கள், சென்னை மாகாணப் பூகோளச் சங்கச் செயலாளர் சுப்பிரமணிய ஐயரவர்கள், மாகாணக் கல்லூரிப் பேராசிரியர் மணவாள ராமாநுசம் அவர்கள், இலங்கை மொழிபெயர்ப்பாளர் சுப்பிரமணிய ஐயரவர்கள் முதலிய பெரியார் தலைமையிலே கலைச்சொற்கழகம் அமைக்கப் பெற்றுச் சொற்களை ஆராய்ந்து முடிவு செய்தன. நல்ல திருத்தங்களுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன. கோவை மாவட்ட ஆசிரியர் சங்கம் முதற் பரிசு பெற்றது. பின்னர் சொற்கள் வழிப்படுத்தப் பெற்றுச் சென்னைக் கல்வி மந்திரி டாக்டர் சுப்பராயன் அவர்களால் தொடங்கி வைக்கப்பெற்று அண்ணாமலை பின் சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக இருந்த அரங்கநாதனவர்கள் தலைமையிற் கலைச்சொல் அரங்கேற்று மாநாடு தியாகராயநகர் இந்திப்பிரசார சபை அரங்கசாமி ஐயங்கார் மண்டபத்திற் கூடிற்று; முன் அரசியலார் கழகத்தின் செயலாளராக இருந்த திரு. கிருஷ்ணராவ் பான்சிலே அவர்கள் முன்மொழிய இக்கலைச்சொற்களை அனைவரும் ஏற்றுக் கொள்வதென்ற தீர்மானம் ஒருமுகமாக நிறைவு பெற்றது. சென்னைப் பல்கலைக் கழகத்தார், திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்தார், திரு. இராசகோபாலாச்சாரியார் ஆகிய இவர்களுடைய பொருளுதவியினாலே "கலைச் சொற்கள்" அச்சாகி வெளிவந்தன. சென்னை அரசாங்கத்தார் அறுநூறு கலைச்சொற்படிகளை விலை கொடுத்து வாங்கி அந்நூலிலுள்ள சொற்களைப் பள்ளிக்கூடங்களில் தாராளமாகப் பயன்படுத்த வேண்டும் என்ற ஆணையுடன் எல்லா உயர் பள்ளிக்கூடங்களுக்கும் அனுப்பி உதவினர்.

மேலே கண்ட செய்திகளைக் காண்பார் யாவரும் நமது மாகாணத் தமிழ்ச்சங்கம் எவ்வளவு முன் எச்சரிக்கையுடன் பகைவரும் குறைகூறாத நிலையில் செயல்களை நிறைவேற்றியிருக்கிறது என்பதை உணராமல் இரார். அப்படியிருந்தும் தமிழ் அன்பர்கள் இடையூறு செய்ய முன் வந்தார்கள்; சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் கூட்டத் (Senate)திலே சங்கத்துக்குப் பொருளுதவி செய்தது தவறு என்று தீர்மானம் கொண்டு வந்தார்கள்; அதற்கு அவர்கள் காரணமாக நமது சங்கம் பார்ப்பனரை வெறுப்பது என்றும், சம்ஸ்கிருதத்துக்குப் பகை என்றும் கூறினார்கள். இது உண்மைக்கு முற்றிலும் மாறான பேச்சல்லவா? தமிழைத் தமிழாகவே வளர்க்க வேண்டும்; சம்ஸ்கிருதச் சொற்களைக் கலக்கக் கூடாது என்று பாதுகாப்பது சம்ஸ்கிருதத்தை வெறுப்பதாகுமா? அப்போது அவ்வாட்சிக் கூட்ட உறுப்பினராக அமர்ந்திருந்த நமது சங்கத்

துணைத்தலைவர் பேராசிரியர் சீனிவாசராகவ ஐயங்காரவர்களால் அவர்கள் பேச்சுப் பொய்ம்மைக்கே இருப்பிடம் என்பது வெட்ட வெளிச்சமாக்கப்பெற்றது. அக்காலத்தில் ஓமந்தூர் இராமசாமி ரெட்டியாரவர்கள் தலைமையில் இராசபாளையத்தில் நடைபெற்ற காங்கிரசு மாநாடு நமது கலைச்சொற்களைப் பாராட்டி ஆதரித்தது. பின் சில மாதங்களில் காங்கிரசார் ஆட்சியை விட்டுவிலக, அச்சமயத்தை வாடியிருக்கும் கொக்குப்போன்ற தமிழ்அன்பர் பிடித்துக் கொண்டனர். அவர்கள் அன்று 1940-ல் மாகாணக் கல்வித் தலைவராக இருந்த திரு. ஃச்டேதம் அவர்களுடைய துணையால் அரசாங்கத்தை வசப்படுத்தி மாகனம் சீனிவாச சாத்திரியா ரவர்களுடைய தலைமையிலே ஒரு கலைச் சொல்லாக்கக் கழகத்தை அமைத்தார்கள்; அதிலும் ஒரு சூழ்ச்சி செய்தார்கள். "சென்னை மாகாணம் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு மொழிகள் அமைந்த ஒரு நாடு; இந்நாடு முழுமைக்கும் பொதுவான கலைச்சொற்களை அமைக்க வேண்டும்; அது சம்ஃச்கிருதச் சொற்களாக அமைத்தால்தான் முடியும்; சில சொற்கள் ஆங்கிலச் சொற்களாகவே இருக்கலாம்; வேண்டுமென்றால் இரண்டொன்று அவ்வம் மொழிகளிலும் இருக்கலாம்." இங்ஙனம் திட்டமிட்டுக் கொண்டு சாத்திரியார் கழகம் வேலை செய்யத் தொடங்கிற்று. உடனே சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கம் சென்னையிலே ஒரு பெரிய மாநாடு கூட்டி அரசாங்கத்தை வன்மையாகக் கண்டித்தது. இலங்கைச் சட்டசபை உறுப்பினரும் பேராசிரியருமாகிய திரு. நடேச பிள்ளை யவர்களாலே தமிழ்க் கொடி யேற்றப் பெற்றும் குமாரராசா (இன்று செட்டி நாட்டு அரசர்) முத்தையச் செட்டியாரவர்களாலே தொடங்கி வைக்கப் பெற்றும் அறநிலையக் காப்புத் தலைவர் திவான்பகதூர் T. M. நாராயணசாமிப் பிள்ளையவர்கள் தலைமையிலே மாநாடு மிகவும் வெற்றியாக நடைபெற்றது; இராவ்பகதூர் டாக்டர் திருமூர்த்தி ஐயரவர்கள் வரவேற்புத் தலைவராகத் தொண்டாற்றினர்; மகாமகோபாத்தியாய கதிரேசச் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்ற புலவர் மாநாடும் அரசாங்கத்தைக் கண்டித்து உண்மைநெறி காட்டிற்று. அந்த அடியுடன் சாத்திரியார் கழகம் நடுங்கி யிருப்பதுபோலக் காணப்பட்டது; "ஆனால் அடி வேகம் குறையவில்லை" என்று திரு. சீனிவாச ஐயங்காரவர்கள் கூறியதுபோல மறைமுகமாக வேலை நடைபெற்றே வந்தது.

1946-இல் மறுபடி காங்கிரசு அரசாங்கம் வந்தது; திரு. அவிநாசிலிங்கம் செட்டியாரவர்கள் கல்வி மந்திரியானார்கள். உடனே அன்பர்கள் மந்திரியவர்களை அடுத்து அவருடைய

நல்லன்பையும் பெற்றுத் தாம் ஆக்கிவைத்திருந்த சொற்களை அச்சிட்டு ஆட்சிக்குக் கொண்டுவரும்படி தூண்டினர்கள். திரு. செட்டியாரவர்களும் அவர்களுடைய வலையிற்பட்டு அச்சொற்களை உடனே அச்சிட முனைந்தார்கள். அப்போது எத்தனையோ தமிழ்ப்பெரியார் கூறியும் மந்திரியார் செவியில் நல்லுரைகள் ஏறவில்லை. இதனையறிந்து சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கக் கட்டளைப்படி யாம் சென்னை சென்று சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தென்னிந்தியத் தமிழ்ச்சங்கச் செயலாளராகிய திரு. வ. சுப்பையாப் பிள்ளையவர்களுடன் சேர்ந்து சிந்தித்து காங்கிரசுப் பெரியார் முத்துரங்க முதலியாரவர்களைக் கண்டு "தமிழ்ச்சங்கக் கலைச்சொற்களுக்கு முன் காங்கிரசு அரசாங்கமும் காங்கிரசும் அளித்துவந்த ஆதரவையும், அதற்குப் போட்டியாக 1940-இல் ஆங்கிலர் அரசாங்கம் அமைத்த கழகச்சொற்களை வடமொழியும் ஆங்கிலமும் மலிந்திருந்தும் அவைகளையே அச்சிடுவதற்கு மந்திரி முனைந்திருப்பதையும் தெரிவிக்க, அவர்கள் பெருந்துணை செய்ய முன்வந்தார்கள். அவர்கள் பெருந் தலைமையில் 10-10-1946-ல் கோகலே மண்டபத்தில் அரசாங்கத்துக்கு அறிவுறுத்தற் பொதுக் கூட்டமொன்று நடைபெற்றது. எள்விழ இடமில்லாப் பெருங் கூட்டம். அதிலே வீறுகொண்டெழுந்து திருவாளர்கள் ம. பொ. சிவஞானக் கிராமணியாரவர்கள், இளஞ்சிங்கம் டாக்டர் மு. வரதராசனரவர்கள் முதலிய பல பெரியார்கள் பேசினர்கள். அதன் விளைவாக மந்திரியார் நமது சங்கம் குறிப்பிடுபவர்களைச் சேர்த்துத் தமிழ்ச் சொற்களை ஆராய்ந்து முடிவுசெய்ய இறங்கி வந்தார்கள். நாம் 1940-இல் நடத்திய கண்டன மாநாட்டு வரவேற்புத் தலைவராக இருந்த டாக்டர் திருமூர்த்தி ஐயரவர்கள் தலைவராக ஆக்கப்பெற்றார்கள். சங்க அமைச்சராகிய நாமும், திருவாளர்கள் பேராசிரியர் மணவாளராமானுசமவர்கள், சேதுப்பிள்ளையவர்கள், முத்தையா அவர்கள், சாமிபரமாத்மானந்தா அவர்கள் முதலிய பெரியார்களும் முன்னிருந்த கழகத்துடன் சேர்க்கப்பெற்றோம். நல்ல தமிழ்க்கலைச்சொற்கள் ஆக்குவதற்காகவே இக்கழகம் அமைக்கப்பெற்றது என்ற அறிக்கையும் வெளியாயிற்று. கலைச்சொற்கழகம் வேலை தொடங்கியபோது பழையர் சிலர் சம்ஃச்கிருதச் சொற்களைத் தான் போடவேண்டுமென்பது இக்கழகநோக்கமென்று வாதாடினர்; அதனல் புதியர் ஒருவர் மந்திரியிடம் சென்று தெரிவிக்க அவர் நல்ல தமிழ்ச்சொற்கள் போடவே இக்கழகம் கடமையுடையது; வடசொற்களைப் போடுதல்கூடாது என்ற ஆணையை அனுப்பியுதவினர். கூடுமானவரை நல்ல தமிழ்ச்சொற்களே ஆக்கப்பெற்றன. என்றாலும் எப்படியோ மந்திரியார் வற்புறுத்

தப்பட்டு அன்பர் வசமாகிக் கழகம் கொடுத்த சொற்களை மாறு பாடுசெய்து சம்ஃச்கிருதச் சொற்களை இடைப்பெய்தே அச்சிட்டு வெளியிட்டனர். "தமிழ்நாடு உண்மையை அறியவேண்டும்; தமிழ்மக்கள் ஏமாந்தவர்களாக ஆகக்கூடாது; விழித்தெழுந்து தாய்க்கொலையைத் தடுக்கவேண்டும்," என்ற ஒரே நோக்கத்துடன்தான் இவ்வுண்மைகளை வெளியிடுகின்றோம். இங்ஙனமாக எடுத்த எடுத்த இடங்களிலெல்லாம் ஒரு தொகுதியினர் தமிழைப் பாழாக்கத் தமிழன்பர் என்ற போர்வையிலே மறைந்து சூழ்வார்களானால் என்செய்வது! இந்நாடு எப்படி முன்னுக்குவரும்? இத்தகையவரும் தம்மைத் தமிழ்மக்களே என்றுதான் சொல்லிக்கொள்கின்றனர்; இவர்களை எப்படி நம்புவது?

### தமிழ்வளர்ச்சிக் கழகம்

இங்ஙனமாக ஒருநிலை நில்லா மந்திரி திரு. அவிநாசிலிங்கம் செட்டியாரவர்கள் தமிழிலே "கலைக் களஞ்சியம்" ஆக்கவேண்டுமென்று சொல்லி அதன் சாக்கினாலே புதிதாகத் "தமிழ்வளர்ச்சிக் கழகம்" என்ற ஒரு சங்கம் அமைத்தார். அச்சங்கத்துக்குத் தமது மந்திரிச் செல்வாக்கைப் பயன்படுத்திப் பெரும் பொருள் சேர்த்தார். அதனோடு அரசாங்கத்திலிருந்தும் பெரும்பொருள் ஆண்டுதோறும் பெறுவதற்கு ஏற்பாடு செய்தார். பல்கலைக்கழகக் கட்டிடங்களிலே சில அறைகளைக் கழகநிலையமாக்கினார். இவைகளெல்லாம் மிகமிக நல்ல செயல்களேதாம்; ஆனால், தமிழ்வளர்ச்சி என்ற பெயராலே தமிழ்க்கொலை தெரிந்தோ தெரியாமலோ நடைபெறுமானால் அதனைத் தமிழ்மக்கள் பொறுக்கவேமாட்டார்கள். கலைக்களஞ்சிய ஆக்கம் வெளிப்படையாகச் செய்யப்பெறுதல் வேண்டும்; மிகப் பெரிய காரியம்; என்றும் நிற்கவேண்டிய பெரிய காரியம்; தமிழ்மக்கள் பொதுப்பணத்திலிருந்து நடைபெறுகிற பெரிய காரியம், கண்டபடியெல்லாம் சம்ஃச்கிருதச் சொற்களைக் கலப்பதும், ஐ, ஷ, ஹ, ஸ, க்ஷ என்ற சம்ஃச்கிருத எழுத்துக்களைப் புகுத்தி எழுதுவதும் தமிழ்த்தாயைக் கொலைசெய்யும் அறக் கொடும்பாதகச் செயலாகும். பொதுப்பணத்தினாலே நடைபெறுகின்ற செயல் ஆனதனாலே பொதுமக்களையும் புலவர்களையும் கூட்டிக் கலந்து முடிவுசெய்யவேண்டிய பெரிய காரியம் இது. தமிழ்ப்பெருமக்கள் மிகமிக விழிப்பாக இருக்கவேண்டிய காலம் இது.

"இத்தனைக்கும் மேலாக இட்டாளாம் முக்காடு" என்ற பழமொழிக்கு இணங்க இப்போது இன்னுமொரு பெருங்கொலையில் இக்கழகம் இறங்கியிருக்கிறது; அதுதான் தமிழ் எழுத்து மாற்றம். தமிழ் அன்பர் திரு. C. R. சீனிவாச ஐயங்

காரவர்களும் இதிலே முனைந்து ஈடுபட்டார்கள். கல்வி மந்திரியார் தமது அரசியற் செல்வாக்கு அத்தனையையும் இதிற் பயன் படுத்தினர்; கழகத்தின் பெயராலும், அரசாங்கத்தின் பெயராலும் உட்கழகங்கள் அமைத்தார்; அதிலே தமது தயவை எதிர் நோக்கும் சில பெருந்தமிழ்ப் புலவர்களையும் தமிழ் அன்பர்களையும் உறுப்பினராக்கினர். எழுத்து மாற்றம் இன்றியமையாததுதான் என்று முடிவுசெய்தார்; தமக்குப்பின் மந்திரியான தமிழறியாத திரு. மாதவமேனன் அவர்களைக்கொண்டு தமிழ் எழுத்து மாற்றம் செய்யவேண்டுமென்று ஆணையிடத் தூண்டினர். கழகத்தில் இருந்த தமிழ்ப்பெரும்புலவர்கள் என்ன செய்வார்கள்? பேசாமல் இருந்திருப்பார்கள். இதற்கு ஒரு தக்க சான்று இங்கே காட்டுவோம். கீழே வருவது "தமிழர் நாடு" என்ற மாதத்தாளில் மலர் 2, இதழ் 6-இல் (14-1-1950) பக்கம் 29—30-இல் காணப்படுகிறது.

"எழுத்துத் திருத்தம்" பற்றி 21-12-1949-இல் கல்வி மந்திரி அவிநாசிலிங்கம் செட்டியாரவர்கள் தலைமையில் நடந்த கூட்டத்தில் "கழகத்தின் தலைவர் முதல் முடிவை உயிரெழுத்து 12-ம், மெய்யெழுத்து 18-ம், ஆய்த எழுத்து 1-ம் அப்படியே இருக்க வேண்டும் என்று எழுதிக்கொண்டார். அடுத்து 2-வது முடிவை எழுதிய பிறகு மூன்றாவது முடிவு என "ப், ம், ச் என்ற எழுத்துக்கள் அப்படியே இருக்கவேண்டும்" என்று எழுதினர். "இது தேவையில்லை. முதல் முதலிலேயே மெய் யெழுத்துக்கள் 18-ம் அப்படியே இருக்கவேண்டும் என்று எழுதப்பட்டிருக்கிறது," என எடுத்துக்கூறியும் அதை அவர் ஒப்பாமல் "அதுவும் இருக்கட்டும்; இதுவும் இருக்கட்டும்" எனக் கூறிவிட்டார். கடைசியாக, எழுதிய முடிவுகளையெல்லாம் தலைவர் படித்துக் காட்டிவருகையில் திரு. ம. பொ. சிவஞானக் கிராமணியார், "அந்த மூன்றாவது முடிவு வேண்டியதில்லை! அது முதல் முடிவில் எழுதப்பெற்றுவிட்டது. இச்செய்தி நாளைப் பத்திரிகையில் வெளிவந்தால் 'மெய்யெழுந்து எது என்று தெரியாதவர்கள்தான எழுத்துச் சீர்திருத்தம் செய்ய வந்தவர்கள்' என்று நம்மைக் கேலி செய்வார்கள். அதை அடித்துவிட வேண்டும்," என்று தெரிவித்தார். அப்போதும் தலைவர் தாம் எழுதியதை அடிக்க மனமில்லாமல் தமிழ்ப்புலவர் திரு. ஆலால சுந்தரம் செட்டியாரவர்களை அழைத்து "ப், ம், ச் எழுத்துக் களுக்கு என்ன பெயர் சொல்வது? மெய்யெழுத்துக்கள்தானா?" என்று கேட்டார். அதற்கு அவர் "ஆம்! மெய்தான்" என்ற பிறகே அந்த முடிவு அடிக்கப்பெற்றது. "தமிழர் நாடு"வில் இச்செய்தியை வெளியிடுவது எதன்பொருட்டு? (அ) தமிழ்

வளர்ச்சிக் கழகத்தின் தலைவருக்கு இருக்கும் தமிழ் அறிவை விளக்கிவிட்டால் அவரைத் தலைவராகக் கொண்டுள்ள தமிழ் வளர்ச்சிக் கழக உறுப்பினர்களின் தமிழறிவை விளக்கவேண்டியதில்லை என்பதற்காக. (ஆ) 20 பத்திரிகையாளர்கள் அங்கு வந்திருந்தும், நடந்த இவைகளைக் கண்டும் இவற்றை எழுதாதிருப்பதை எடுத்துக்காட்டுவதற்காக. (இ) தமிழ் மொழிக்கு இன்று நேர்ந்திருக்கிற அழிவுநிலையைத் தமிழ்நாட்டு மக்கள் அறிந்துகொள்வதற்காக.

நாம் இங்கே இதனை எடுத்துக் குறித்ததன் நோக்கம் இருபது பத்திரிகாசிரியர்கள் கூடி இப்பெரு நிகழ்ச்சியைக் கண்ணாரக் கண்டிருந்தும் ஒருவருக்காவது இதனை வெளியிடும் திறமை தோன்றவில்லை; முதன்மையான காரணம் மந்திரியாருடைய முகம் முறிந்துவிடக்கூடாது என்பதுதான். எவரையும் எதிர்பார்க்கவேண்டாத பத்திரிகை ஆசிரியர்கள் நிலையே இங்நிலையானுல் மிகக் குறுகிய வருவாயுடன் நாடோறும் வாழ்க்கையிற் போராடித் தட்டழியும் தமிழ்ப் புலவர்கள் என்ன செய்வார்கள்? மாமன்னர், "வெள்ளைக் காக்கை பறக்கிறது," என்ருல், "ஆம், ஆம். மன்னவ! இரண்டு கண்டேன்," எனத்தானே அவர்களுடைய ஆளுகையில் இருப்பவர்கள் கூறுவார்கள்! தமிழ்ப்புலவர்கள் தாம் உள்ளவாறு கருதும் கருத்துக்களை அப்படியே வெளியிட முடியாதபடி தடை, கண்காணிப்பு முதலிய பலவகை முட்டுக்கட்டைகளாலேயே கல்வி மந்திரியினுலே கொடுமைப்படுத்தப்பட்டதோடு இழிவாகவும் கூட்டங்களிலே பேசப்பட்டார்கள்.

கல்வி மந்திரியார்

இப்போதுள்ள கல்வி மந்திரியார் நமது சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் 17-3-1950-லேயே பல தமிழ்ச்சங்கங்களைக் கலந்துகொண்டுதான் எழுத்து மாற்றம் பற்றி ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று வேண்டிக்கொண்டிருந்தும் எதையும் பொருட்படுத்தாமல் ஆத்திரப்பட்டு எழுத்து மாற்றத்தைச் செய்யவேண்டுமென்று துணிந்திருக்கிருர். 21-7-1951-லும் பின்னரும் அவருக்கு விடுத்த கடிதங்களுக்கு மறுமொழியே இல்லை; அவர்களுடைய தலைமையில் வேண்டுமென்ருல் முதன் மந்திரியவர்களையும் உடன்கொண்டு புலவர் கூட்டமொன்று கூட்டுவோம் என்ற வேண்டுதலைப்பற்றி மௌனம் சாதிக்கின்றனர்.

(தொடரும்.)

# ஒன்றே முக்கால்

[திரு. G. சுப்பிரமணிய பிள்ளை, M. A., B. L.]

தமிழ்மொழிக்கே முதற்பாவலராய்த் திகழ்பவர் திருவள்ளுவர். அவரை மிஞ்சியவராய் எவரும் அவருக்கு முன்னும் இருந்ததில்லை, பின்னும் இருந்ததில்லை. இலக்கிய வானிலே திருவள்ளுவர் ஒரு சூரியன்; ஏனைப்புலவர்கள் தண்ணொளி மழுங்கித் தாமகலும் தாரகைகள். புலவர் என்ற பெயரைத் திருவள்ளுவர் தமக்கே உரித்தாக்கிக் கொண்டார். அவர் ஒருவரே புலவர், ஏனையோரைப் புலவர் என்று கூறுவது பொருந்தாது என்பதைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர் கிழார் என்பவர் கூறியுள்ளார்:—

> "புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
> சிலவர் புலவரெனச் செப்பல் — நிலவு
> பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
> கறங்கிருள்மா லைக்கும் பெயர்."

திருவள்ளுவர், அகன்று பரந்த அகவல் விருத்தத்தாலோ, கடலெனக் கலித்த கலிப்பாவாலோ, எஞ்சாது மிஞ்சிய வஞ்சிப்பாவாலோ தமது நூலைப் பாடவில்லை. பாக்களுக்குள்ளே முதற்பாவாகிய வெண்பாவாலே முதற் பாவலர் தமது நூலைச் செய்தார். வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நான்கு வகைப் பாக்களுக்குள்ளே வெண்பா ஒன்றுதான் கற்றற்கு மிக எளிது. 'வெண்பா இருகாலிற் கல்லானை' என்ற வாக்கையும் நோக்குக. ஆனால், வெண்பா பாடுதற்கும் மிக எளிது என்று நினைத்துவிடவேண்டா. எல்லாப் புலவர்களும் வெண்பாவை எளிதிற் பாடிவிட முடியாது. மற்றப் பாக்களையெல்லாம் சரமாரியாகப் பொழிந்து விடுவார்கள். ஆனால் வெண்பா என்றவுடன் புண்பாவிய மனத்தராய்க் கண்பால் நீர் பொழிந்து விடுவார்கள். இதனை,

> "காசினியிற் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்
> பேசு முலாவிற் பெரும்பைபுலி — ஆசு
> வலவர்க்கு வண்ணம் புலியாமற் றெல்லாப்
> புலவர்க்கும் வெண்பாப் புலி"

என்ற பழம்பாட்டாலும் அறியலாம்.

அத்தகைய வெண்பாவிலும், அதன் பாவினங்களுள் அளவில் மிகமிகச் சுருங்கியதாகிய குறள் என்னும் வெண்பாவினால் பாடினார் திருவள்ளுவர். குறுகியிருப்பதால் குறள் என்னப்

பட்டது. இரண்டடியால் வந்து, செப்பலோசை யுடைத்தாய், முதலடி நாற்சீராய், இரண்டாவதாகிய ஈற்றடி முச்சீராய், வெண் சீரும் இயற்சீரும் வந்து, வெண்டளை தட்டு, வேற்றுத்தளை விரவாது, காசு, பிறப்பு, நாள், மலர் என்னும் வாய் பாட்டால் முடிவது குறள் வெண்பா. உலகையெல்லாம் அளந்து காட்டிய திருவள்ளுவர் பாடவந்த பொருளோ கடலினும் மிகப் பெரிது. ஆனால், அதற்கு அவர் கையாண்ட கருவியோ மிகமிக நுண்ணிது. ஒரு குறள் பாட்டைப் பார்த்தவுடனே அது இரண்டு அடிகளைக் கொண்டது என்று யாரும் சொல்லிவிடுவார்கள். உண்மையில் அஃது இரண்டடி ஆகாது. ஒவ்வொரு குறள் வெண்பாவிலும் ஒன்றேமுக்கால் அடிதான் உண்டு. யாப்பிலக்கணத்தில் நான்கு சீர் நிறைந்துவரும் ஒரு வரியைத்தான் அளவடி அல்லது நேரடி என்று கூறுவர். ஒரு குறளை எடுத்துக்கொண்டால், அதன் முதல் வரியில் நான்கு சீர்களும் குறையாமல் வந்து அளவடியாய் இருப்பதால், அஃது ஓர் அடியாகும். குறள் வெண்பாவின் இரண்டாவது வரியில் மூன்று சீர்களே வரலாம். மூன்று சீருக்கு மிகவும் குறையவும் கூடாது. ஆகவே அது முக்கால் அடிதான் ஆகும். மூன்று சீர் வந்த அடியைச் சிந்தடி என்று கூறுவர். இவ்வாறு, ஒவ்வொரு குறளிலும் முதல்வரி ஒன்றும், இரண்டாவது வரி முக்காலும் ஆக ஒன்றேமுக்கால் அடிதான் உண்டு.

> "பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
> சிலசொல்லல் தேற்றா தவர்"

என்ற தம் வாக்குக்கு ஏற்பவே, குறுகிய குறளைக்கொண்டு தம்முடைய பெருகிய அறநூலைத் திருவள்ளுவர் பாடினார். அதனால் அவர் பாடிய நூலும் வேறு எப்பெயரும் கொள்ளாது, திருக்குறள் என்று அவர் பாடிய பாவின் பெயரையே பெற்றது. தமிழ் இலக்கியத்தில் ஏனைப்பாக்களால் பாடப்பெற்ற நூல்கள் ஏராளமாய் மலிந்து குவிந்து கிடக்கின்றன. குறள் வெண்பாவால் யாத்த நூல்கள் ஒன்றிரண்டே உள்ளன. அதன் பாடற் கருமையே இதற்குக் காரணம் என்னலாம்.

திருக்குறள் முதல் அதிகாரமாகிய கடவுள் வாழ்த்தில், ஏழு குறள்களில் வள்ளுவர் இறைவனுடைய திருவடியைக் கூறியிருக்கிறார். என்னவெல்லாம் கூறினார்? ஆகமம் முதலிய பல நூல்களைக் கற்பதன் பயன் அறிவு மயமான ஆண்டவனது நல்ல தாளைத் தொழுவது என்றார். பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், இறைவன் திருவடியை 'நற்றாள்' என்று சிறப்பித்தார். இறைவன் திருவடி எங்கேயிருக்கிறது என்று அதனை நாம் தேடிக் கொண்டு அலையாமல், இருந்த இடத்திலிருந்தே இடைவிடாது

நினைத்த மாத்திரையில், அது நம்மைத் தேடிக்கொண்டு வந்து, நம் இதயப் பூவிலே ஏறி நடந்து, ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பங்களை நுகர்விக்கும் மாட்சிமை தோன்ற 'மாணடி' என்றும் சிறப்பித்தார். விருப்பு வெறுப்புகளை அறுத்தவர்க்குத் தம்மைப்பற்றி வருவனவும், பிற உயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவும் ஆகிய மூவகையான எல்லாப் பிறவித் துன்பங்களையும் இறைவன் திருவடி போக்கிவிடும் என்றார். ஒப்புவமையில்லாத இறைவன் திருவடியைத் தவிர மனக் கவலைக்கு வேறு மருந்து இல்லையென்றார். பலவேறு வகைப் பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவமாகவுடைய அருட்கடலாகிய இறைவன் திருவடியைச் சேர்ந்தால், காமமும் பொருளும் பற்றி வரும் அவலம் கெடும் என்றார். குணம் நிறைந்த அத் திருவடியை வணங்குதலே இவ்வுடம்பு எடுத்த லால் பெற்ற பயன் என்றார். இறைவன் திருவடியைப் புணையா கக் கொண்டே பிறவிக்கடலைக் கடத்தல் கூடும் என்றார். அத் திருக்குறள் வருமாறு:—

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்."

இக்குறளிற் கண்ட கருத்து அப்பர் அடிகளின் திருவாக்கு ஒன்றால் இனிது விளங்கிக் கிடத்தலை நாம் இங்குத் தெரிந்து கொள்ளலாம்:—

"துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்தம்மை
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன மாற்றயலே
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப் பொய்பொருந்தா
அன்பர்க்கு அணியன காண்கஐ யாறன் அடித்தலமே."

ஏழு சீர்கள் வரப்பெறும் குறள் வெண்பாவால் யாத்த திருக்குறளின் முதல் அதிகாரத்தில், ஏழு குறள்களில் இறைவன் தாளைக் கண்டோம். வள்ளுவர் வாக்கினின்றெழுந்த தமிழ்மறை யில், இரண்டிரண்டு அடியாக வந்துள்ள ஒவ்வொரு குறளினுமே சிவபெருமானின் இரண்டு திருவடிகளையும் காணலாம் என்கிறார் சிவப்பிரகாச சுவாமிகள்:—

"என்னடிகள் வெண்குறள்நேர் அடியி ரண்டும்
என்தலையில் இருத்தும்இறை வெங்கை நாட்டின்
முன்னடிகள் இரண்டுநெடில் அடிகள் பின்னர்
முயங்கடிகள் இரண்டுநேர் அடிகள் ஆகப்
பன்னடிகள் ஒருநான்கு கொடுந டக்கும்
பழுதகல்வெண் டுறைபோலப் படர்த லாலே
பின்னடிகள் எங்கள்திரு வடிகள் முன்னர்ப்
பெயர்ந்தஅடி எழில்இளஞ்சேய் அடிகள் ஆமே."

(சுவடுகண்டு இரங்கல் என்னும் துறை: திருவெங்கைக் கலம்பகம் - 42)

கற்பனையிற் கைவந்த அக் கவிப்புலவர், திருவள்ளுவரை 'என்னடிகள்' என்று பாராட்டுகிறார். ஒவ்வொரு குறளும் முதலடி நான்கு சீரும், இரண்டாவதடி முச்சீருமாக இரண்டு அடிகளை யுடையது. சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளும் திருக்குறளின் இரண்டு அடிகளையும் ஒக்கும் என்பதே துறைமங்கலம் சுவாமிகளின் கருத்து.

"ஒய்விலாதன உவமனிலிறந்தன ஒண்மலர்த்தாள்" என்று மாணிக்கவாசகர் மனம் உருகிப் பாடினார். அத்தகைய உவமன் இல்லாத திருவடிகளுக்கு ஓர் உவமை கண்டு சொன்னார் சிவப்பிரகாசர். ஆனால் எத்தகைய உவமை? திருக்குறளின் ஒன்றே முக்கால் அடிகளை ஈசனது இரண்டு அடிகளுக்கும் உவமை சொன்னார். ஐயோ! வேறு உவமை கூறியிருக்கலாகாதா? சிவனுடைய இரண்டு சீரடிகளுக்கு இரண்டு நேரடிகள் கிடைக்கவில்லையா? ஒன்றேமுக்கால் அடியைத்தானா உவமை கூறவேண்டும்? அங்ஙனமாயின் சிவனுக்கும் இரண்டு அடி என்று ஆகாது, ஒன்றேமுக்கால் அடி என்றல்லவோ முடியும்? சிவன் காலிலும் ஒருகால் குறையுமே. அது ஊனமாகுமே, என்று சிறிது தயக்கம் ஏற்பட்டது. அப்பொழுது பளிச்சென்று அப்பர் அடிகளின் திருத்தாண்டகம் ஒன்று நினைவிற்பட்டது:—

"திருமகட்குச் செந்தா மரையாமடி
சிறந்தவர்க்குத் தேனுப் விளக்கும்மடி
பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்றவடி
புகழ்வார் புகழ்தகைய வல்லவடி
உருவிரண்டும் ஒன்றோடொன்று ஒவ்வாவடி
உருவென்று உணரப் படாதவடி
திருவதிகைத் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி."

உருவிரண்டும் ஒன்றோடு ஒன்று ஒவ்வாத திருவடிகள் என்றல்லவோ அப்பரும் பாடியிருக்கிறார். சிவன் திருவடிகளில் ஒன்று அளவடி. மற்றொன்று சிந்தடிதான். சிவபெருமான் ஒரு காலிலே பொற்கழல் அணிந்திருக்கிறார். மற்றொரு காலிலே சிலம்பும் பாடகமும் கிண்கிணிச் சதங்கையும் ஒலிக்கின்றன. அப்பர் அடிகள் இதனையும் கூறியுள்ளார் :—

"சிலம்புஞ் செறிபா டகமுஞ் செழுங்கிண் கிணித்திரளும்
அலம்புந் திருவடி காண்க ஐயாறன் அடித்தலமே."

"பொருகழலும் பல்சிலம்பும் ஆர்க்கும்மடி."

ஆகா! இப்பொழுது சிவப்பிரகாசரின் உவமைப்பொருத்தம் எவ்வளவு சிறப்பாக விளங்குகின்றது! திருக்குறளடி இரண்டில் ஒன்று நாலு சீர்த்ததாய் நீளமான அளவடி; மற்

றொன்று முச்சீர்த்ததாய்க் குறுகலான சிந்தடி. இவ்விதமே சிவபெருமான் திருவடிகளுள் ஒன்று மற்றொன்றைவிடக் குறுகிய அடியாகவே காணப்படும். சிவபெருமானுடைய வலத்தாள் ஆண் அடி; இடத்தாள் பெண் அடி. சிவபெருமான் திருவடிகளும் இரண்டு நேரடிகள் ஆகாது, ஒன்றேமுக்கால் அடியாகவே இருக்கும். இவ்வாறு ஆண் அடி ஒன்றும் பெண் அடி ஒன்றுமாய்ச் சிவனுக்கு அமைந்ததால், ஆணும் பெண்ணும் அல்லாத அலியின் அடி என எல்லாரும் கேலி செய்யும்படியாகி விட்டதே என்று அப்பர் பாடிய பாடல் வருமாறு:—

"வலியான் தலைபத்தும் வாய்விட் டலற வரைபடர்த்து
மெலியா வலியுடைக் கூற்றை யுதைத்துவிண் ணோர்கண்முன்னே
பலிசேர் படுகடைப் பார்த்துப்பன் னூலும் பலரிகழ
அலியா நிலைநிற்கும் ஐயன் ஐயாறன் அடித்தலமே."

என்று நகைச்சுவைதோன்ற அப்பர் அடிகள் பாடியநயம் நோக்கி இன்புறத்தக்கது.

ஆணின் அடியைவிடப் பெண்ணின் அடி எங்கும் எப்பொழுதும் சிறுத்தேயிருக்கும். திருக்குறளின் முதலதாகிய நீண்ட அடியை வலப்பக்கத்து அத்தனது அடியாகவும், இரண்டாவதாகிய சிற்றடியை இடப்பக்கத்ததான அம்மையது அடியாகவும் ஒப்புநோக்கி உளங்குளிர்ந்து போற்றினர் சிவப்பிரகாசர். இதை நான் அறிந்தநாள் முதற்கொண்டு திருக்குறளைப் படிக்கும்போதும், காணும்போதும், நினைக்கும்போதும் எனக்குச் சிவபெருமானின் அர்த்தநாரீசுவர வடிவமாகிய அம்மையப்பரின் காட்சியும், அதைக்குறித்து அப்பர்பாடியுள்ள பாடல் ஒன்றும் மனக்கண்முன் தோன்றிக்கொண்டேயிருக்கும். அப்பாடல்,

"புதுவிரி பொன்செ யோலை யொருகாதொர்
காது சுரிசங்க நின்று புரள
விதிவிதி வேத கீத மொருபாடு மோத
ஒருபாடு மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்று சடைபாக
மாதர் குழல்பாக மாக வருவர்
இதுஇவர் வண்ண வண்ணம் இவள்வண்ண
வண்ணம் எழில்வண்ண வண்ண மியல்பே"

என்னும் தேவாரமாகும். சிவப்பிரகாசர் திருக்குறளடியையும் சிவனடியையும் ஒப்பிட்டதன் உட்கருத்தாவது, திருக்குறளைக் கசடறக் கற்று அதன்வழியே நின்று ஒழுகுவோர் ஈசன் கழலடியைச் சேர்வது திண்ணம் என்பதாம். ஆகவே, திருக்குறள் அடியும் ஒன்றேமுக்கால்! சிவன் சேவடியும் ஒன்றேமுக்கால்!

தமிழ் வாழ்க

# கல்வி நிலையும் தேசிய வாழ்வும்*

[சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்
சர். ஏ. இலட்சுமணசாமி முதலியார் அவர்கள் ஆற்றிய
ஆக்ராப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவுரை]

1951 நவம்பர் 11-ம் நாள் அன்று சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் ஸர். ஏ. இலட்சுமணசாமி முதலியார் அவர்கள் ஆக்ராப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற பட்டமளிப்புவிழாத் தலைமை உரையில் பல்கலைக் கழகத்தின் பட்டங்களைப் பெற்று நாட்டு வாழ்வில் புகவிருக்கும் மாணவர்களுக்கு ஆற்றிய அறிவுரையாவது:

தேசியத்தின் நற்பண்புகளுக்கு ஒரு வரம்பு உண்டு. நீங்கள் நாட்டுக்கு நலஞ்செய்யவும் மனிதஇன வகையில் உங்கள் பங்குக் கடமையைச் சரிவரச் செய்யவும் விரும்பினுல், அப்போது குறுகிய முறையிலுள்ள தேசியம் போதாது; பரந்த உலகநாட்டு மனப்பான்மை இன்றியமையாது வேண்டும்.

பட்டம் பெற்றவர்களாகிய நீங்கள் விரைவில் பல்வேறு தொழில்துறைகளில் இடம்பெற விருக்கிறீர்கள். அவற்றின் மூலம் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் நற்பணியாற்ற உங்களுக்கு அரிய வாய்ப்புக்கள் ஏற்படப்போகின்றன. நீங்கள் புகப்போகும் ஒவ்வொரு தொழில் துறையிலும் அதற்குரிய அடிப்படை வினுக்கள் உங்கள்முன் வந்து நிற்கும். உங்கள் முதல்வேலை அவற்றுக்கேற்ப அவ்வத்தொழில்களுக்குரிய வரையறுத்த நடைமுறைத் திட்டம் வகுத்து, அதனை உங்கள் வாழ்க்கையில் பயின்று பழகுதல் ஆகும்.

அணிமைக்காலங்களில் பல்கலைக்கழகக் கல்வியின் தரம் மிகவும் தாழ்ந்து விட்டதென்றும், அதனுல் தற்போது அவற்றிலிருந்து வெளிவருபவர்கள் ஒரு தலைமுறைக்கு முன் பட்டம் பெற்று வெளிவருபவர்களுக்கு ஒப்பாயில்லை என்றும் ஆய்வுரைகள் கூறப்படுகின்றன. இணையாட்சிப் பொது ஊழிய ஆணைக்குழு தந்துள்ள குறிப்புரைகள் காரணமாகவும் பிறநாட்டரசுப் பொது ஊழிய ஆணைக்குழுவின் குறிப்புக்கள் காரணமாகவும் இக்கருத்து இன்னும் மிகுதியாக எங்கும் பரப்பப்பெற்றுள்ளது. மாணவர் தரம் தாழ்வுற்றது குறித்தும், போட்டித் தேர்வுகளில் அது காரணமாகப் பல்கலைப் பட்டப்பயிற்சி பெற்றுவிட்ட

*நாட்டின் நலங்கருதி சிறந்த இதனை நன்றியுடன் வெளியிடுகின்றோம்.

மாணவர்கள் இதிலும் எளிதில் தேர்வு பெறுவதற்கு மாறுகத் தோல்வியுறுவது பற்றியும் அவர்கள் அங்கலாய்த்துக் கொண்டுள்ளனர். இம்முடிவை நான் மறுக்கப்போவதில்லை. ஏனெனில் எத்தனையோ முயற்சிகள் செய்தும் பல்கலைக்கழகக் கல்வியின் தரத்திலும் பட்டம்பெற்ற மாணவர் தரத்திலும் மிகத் தெளிவான அறிவுத்தரத் தாழ்வு ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டியவனுகவே இருக்கிறேன்.

இதே சமயம் மற்றொரு செய்தியை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன். இப் பொதுவிதியை ஒப்புக்கொள்வதன் மூலம் இங்குமங்கும் இவ்விதிக்குப் போற்றத்தக்க தனிப்பட்ட விலக்குகள் இருக்கின்றன என்பதை நான் மறுத்ததாக ஆய்விடாது. மேலும், நம் இளைஞர்களிடையே ஏதாவது அடிப்படையான கோளாறு ஏற்பட்டுவிட்டதென்றோ, பல்கலைக் கழகப் பயிற்சியை ஏற்றுப் பயன் அடைவதற்கு அவர்கள் ஏலாதவர்களாய் விட்டனரென்றோ கூறுவது நேர்மையுமாகாது; பொருந்தும் உரையும் ஆகாது.

இந்த நாட்டிலும் சரி, எந்த நாட்டிலும் சரி, மக்களிடையே ஒரு தலைமுறையின் முழு அறிவுநிலையும் அடுத்த தலைமுறையில் குறைந்துவிட முடியும் என்று கூறக்கூடுமா?

ஆனல் அதே சமயம் ஒரு பல்கலைக் கழகப் பயிற்சித் திட்டத்தின் வெற்றிக்கு உதவும் பண்புக்கூறுகள் யாவை? அவை எல்லாரிடத்திலும் அமைந்துள்ளனவா?

> இன்று ஒவ்வொரு கல்லூரியிலும் இடநெருக்கம் மிகுதியாயுள்ளது என்பதும், சில நூற்றுக்கணக்கானவரே இருந்த மாணவர் கல்லூரிகளிலெல்லாம் இன்று நூற்றுக்கணக்கு ஆயிரக்கணக்காயுள்ளது என்பதும் உண்மையன்றோ? பல பயிற்சித்துறைகளில் மட்டுக்கு மிஞ்சிப் பெருந்தொகையினர் சேர்ந்திருப்பதால் மாணவர் ஆசிரியர் ஆகியவர்களுக்கிடையே நெருங்கிய தொடர்பு ஏற்பட வழியில்லாமலிருக்கிறது என்பதும் உண்மையேயன்றோ?

அறிவியலில் கலை இளவல் பட்டம் பெறப் பயிற்சி பெறும் மாணவர்கள் செயல்துறைப் பயிற்சிக்காக 12 அல்லது 14 வகுப்புக்களாகப் பிரிக்கப்பட்டு, அத்துறைகளில் வாரத்திற்கு இரண்டுமணி நேரத்திற்கு மேல் செயல்துறைப் பணிக்கு வகையில்லாமலிருந்தால், அதைக்குறித்து நீங்கள் என்ன எண்ணக்கூடும்? ஒரு நூறு பேருக்குக்கூடச் சரிவரப் பயிற்சிதரப் போதிய வாய்ப்புக்களில்லாத ஒரு பொறியாண்மைக் கல்லூரியில் கிட்டத்தட்ட 400-க்கு மேல் 500-வரை சேர்க்கப்பட்டிருந்

தால் அதைப்பற்றி என்ன நினைப்பது? ஒரு மருத்துவக் கல்லூரியில் ஒரு நூறு மாணவரின் இடத்தில் அதில் மூன்று அல்லது நாலு மடங்கு மாணவர் சேர்க்கப்பட்டு, அதுகாரணமாக அரைகுறையான மேய்புல் பயிற்சிபெற நேர்வதுபற்றி என்ன கூறலாகும்?

இதன் இன்னொரு கூறினை எடுத்துக்கொண்டு பார்ப்போம். முந்தின தலைமுறைகளில் ஆசிரியத் தொழிலுக்கு ஆர்வத்துடன் வந்த புலமைத்திறமுடைய மக்களை இன்று அது தன் பக்கமாகக் கவரமுடியவில்லை என்பது பொதுமக்களுக்குத் தெரியாதசெய்தியன்று. இன்று கல்லூரிகளில் மேலாண்மை யேற்று நடத்தும் பலர் செயல் தேர்ச்சி பெறாத இளம் புலமைக்கூறுடையவர்கள் என்பதும், தம் தேர்ச்சிக்குரிய செய்திகளில் துறைபோகக் கற்பதற்குப் போதிய வாய்ப்பான ஒய்வு அவர்களுக்கு இருந்ததில்லை என்பதும் எவரும் அறிந்ததுதானே! எனவே ஆசிரியத் தொழிலில் நிறைந்த தகுதி காட்டி மாணவர் கவனத்தை அவர்கள் எவ்வளவு ஈர்க்கமுடியுமோ அவ்வளவு அவர்களால் ஈர்க்க முடியாதென்பதும் ஒத்துக்கொள்ளக்கூடியதேயல்லவா? மற்றும் பல ஆசிரியர் ஆசிரியத் தொழிலையே விட்டுவிட்டு அதனினும் ஊதியமுடைய வேலையை நாடித் திரியவேண்டியிருக்கிறது அன்றோ?

**ஆசிரியர் போதா ஊதியம்**

> ஆசிரியத்தொழிலில் ஆசிரியர் வரவுடன் செலவையே சரிக்கட்டாத நிலையில் இருக்கிறார். இத்தகைய நிலைமைகளை வைத்துக்கொண்டு ஆட்சேர்த்து நடத்தும் ஒரு தொழில் தொடர்ந்து தன் தகுதிகளிற் சிறந்தவற்றைப் பிறர்க்கு அளிக்கவும், திறமையுடையவர்களில் சிறந்தவர்களைத் தன் பக்கம் இழுக்கவும் செய்யக்கூடும் என்று நாம் எப்படி எதிர்பார்க்கமுடியும்?

மிகப்பல கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் உள்ள நிலைமைகள் மிகக் குழப்பமானவையாகவே காணப்படுகின்றன. நாம் எல்லாருமே விரும்பி அவாவுகிற உண்மைக் கல்வியை முன்னேற்றுவிக்க இத்தகைய நிலைமைகள் பயன்படா.

உலகின் ஒரு செம் பகுதியை நான் பார்த்து உணர்ந்திருக்கிறேன். உலகின் கிழக்கு மேற்கு ஆகிய இரு கோளப் பாதிகளிலும் உள்ள பல்வேறு பல்கலைக் கழகங்களையும் காணும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டுள்ளது. அம்முறையில் நான் உங்களுக்குக் கூறுகிறேன்: இந்தத் தரத்தாழ்வு நம் நாட்டில் மட்டுமல்ல, பிற

நாடுகளிலும் இருக்கவே செய்கிறது என்று. இரண்டு உலகப் போர்களினாலும் ஏற்பட்ட ஊழ்த் திறம்வாய்ந்த மாறுதல்கள், இன்றுகூட நிலைத்திருக்கும் அதன் தீவிளைவுகள் ஆகியவற்றின் தடங்கள் மாணவர் உள்ளத்திலும் படாதிருக்கும் என்று எதிர் பார்க்கமுடியாது. அத்துடன் கல்வி இன்று ஒரு நூற்றாண்டுக்கு முன்னிருந்த நிலையில் உலகவாழ்விலிருந்து துண்டுபட்ட பழைய குருகுலக் கல்வியாக இருக்கிறது என்றும் கூறமுடியாது.

ஆயினும் பிறநாடுகளிலெல்லாம், வேறு எவ்வகையில் எத்தகைய இன்னல்கள், நெருக்கடித் தேவைகள் இருந்த போதிலுங்கூட, அவற்றால் கல்விக்கு எவ்வகைக் குறைபாடும் ஏற்பட்டுவிடாமல் பார்த்துக்கொள்வதில் எல்லா வகையிலும் முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

இதே உளநிலை நம் நாட்டிலும் இருக்கிறது என்று நாம் மனமாரக் கூறமுடியுமா?

நம்மிடையே செலவு வெட்டுக்கோடரி விழும்பொழுது கல்வித்துறையில் அதன் வெட்டு மிக ஆழமாய்ப் பாய்கிறது. அவரவர்க்குரிய துறைகளிலே நாம் காண்கிறோம்.

இதற்கு ஒரு எடுத்துக்காட்டுத் தருகிறேன். கிரேட் பிரிட்டனில் எவ்வளவோ தொல்லைகள் உள்ளன. அவற்றிடையேகூட, இங்கிலாந்திலும் ஸ்காத்லாந்திலும் உள்ள 24 பல்கலைக் கழகங்களுக்கும் போர்க்கால இழப்புகளை ஈடுகட்டுவதற்காகவும், ஆசிரியர் ஊதியம் உயர்த்துவதற்காகவும், மாணவரில்லங்கள் அமைப்பதற்காகவும், ஆய்வுக்கள வாய்ப்புகளைப் பெறுவதற்காகவும், இன்னும் மிகுதியான விளையாடற் களங்களைத் திட்டமிட்டமைப்பதற்காகவும், மாணவரின் உடல்நலம், அறிவுநலம், ஒழுக்கப் பண்பு நலம் யாவற்றையும் மேம்படுத்தத் தக்க பிற ஏற்பாடுகளைச் செய்வதற்காகவும் உதவும்படி ஒன்றரைக்கோடி பவுன் அளிக்கப் பிரிட்டன் முன்வந்திருக்கிறது.

ஆனால் நம் திட்ட ஆணைக்குப் பின் முதல் ஐந்தாண்டு திட்டத்தின் வரை திட்டப்பகர்ப்பில் கல்விபற்றிய அறிக்கையை நான் யோசிக்கும்போது வருங்காலம்பற்றிச் சிறிது கவலைப்படாமலிருக்க முடியவில்லை. தற்கால நடைமுறையிலுள்ள கல்வி முறையின் வழுக்களைச் சுட்டிக் காட்டிய பின் திட்ட ஆணைக் குழு அடுத்த ஐந்தாண்டுகளில் எல்லா நாட்டகங்களிலும் எல்லாத்தரப்பட்ட கல்வித் துறைகளுக்குமாக ரூ 125 கோடி மொத்தமாகச் செலவாக்க வேண்டுமென்று கருத்துரைக்கின்றனர். அதேசமயம் அடிப்படைக் கல்வி, இடைத்தரக் கல்வி, பல்கலைக் கழகக் கல்வி, தொழில் நுணுக்கத் துறைக் கல்வி,

சமுக்க் கல்வி ஆகியவை பற்றிய வினக்கள் எத்தனையோ பிரிவு களையும் உடனடியாகக் கவனிக்கவேண்டியவையாகும்.

எல்லாருக்கும் பொதுவாகவும், கல்வித்துறையாளர்க்குச் சிறப்பாகவும் மிகவும் கரிசனை தாக்கூடிய மற்றொரு செய்தி மாணவர் இனத்தின் கட்டுப்பாடு பற்றியதாகும். இவ்வகையில் கட்டுப்பாட்டுக் கேடு என்பது சில பகுதிகளைவிட வேறு பகுதி களில் மிகுதியாயிருப்பது காண நமக்குச் சிறிது வியப்பாகவே இருக்கிறது. இதிலிருந்து ஒரு வின எழுகிறது; மாணவர் களிடையே இக்கட்டுபபாட்டுக் கேடு எப்படி எழுகிறது? குரு, தாய் தந்தை, மூத்தோர் ஆகியவர்களிடம் மட்டு மதிப்புடையவர் என்ற பழம்பெரும் பண்புக்குப் பேர்போன நம் இந்திய மாணவர் உலகத்தில் இப்போது மட்டும் அப்பண்புகள் இன்றி யமையாதவை அல்லாதவையாகப் போவானேன்? இங்கும் நான்கேட்க விரும்புகிறேன், இதற்கு மாணவர்கள் மட்டுமதானு பொறுப்புடையவர்கள்?

பொதுவாக மக்களிடையே எந்த நாட்டிலாவது கட்டுப் பாட்டுணர்ச்சி இல்லாமல், இளைஞரிடம் அது ஏற்பட முடியுமா? மாணவர்களைப் பற்றியமட்டில் அவர்கள் முன்மாதிரி ஒரு தொற்றுநோய் போலத் தொடர்வதாயிற்றே! என்வே இந்த விரும்பத்தகாத நிலைமைக் கேட்டிற்கான பொறுப்பில் மூத்தோ ராகிய நமக்கு யாதொரு பங்கும் இல்லை என்று கூறமுடியுமா?

## கட்டுப்பாட்டுக்கெதிரான போதனையின் விளைவுகள்

உண்மை யென்னவென்றால், நம் தேசிய வாழ்வின் சில கூறுகள் உள்ளன. அவை ஒரு காலத்தில் நமக்கு இன்றியமை யாதவையாகவும் இருந்திருக்கலாம். ஆனல், அவை கட்டுப் பாட்டை மீறும்படி மனந்திறந்து போதிப்பவையாயிருந்தன. அவற்றின் விளைவாகவே கட்டுபபாடற்ற தன்மை ஏற்பட்டுள்ளது. அதனை இன்று அடக்கி அமர்த்துவது மிக அரிதாகவே ஆகிவிட்டது.

மாணவர்களிடையே கட்டுப்பாட்டுணர்ச்சியை வளர்க்க உதவத்தக்க சூழ்நிலைதான் இன்று அவர்களைச் சுற்றிலும் இருக்கின்றன என்று கூறுதல் கூடுமா? அரசியல், சமூக, பொருளியல் துறைகளில் பொதுமக்களிடையே கட்டுப்பாட் டமைதி நிலவுகிறதா? கோரிய பயன்களை வலிந்து விரைவு படுத்துவதற்காக உண்ணு நோன்பு முதலிய செப்பிடு வித்தை கள் பெருந்தலைவர்கள் என்று கருதப்படுவோர்களாலேயே தாராளமாக மேற்கொள்ளப்படுகின்றன. அடிக்கடி இத்தகைய

களுக்கு அவற்றின் தகுதிக்குமேற்பட்ட பரப்புதல் வாய்ப்பு தரப்பட்டு, அதன்மூலம் அச்செயல் செய்பவர்களைச் சுற்றிலும் புகழொளியும், பிறரால் வீரராகவோ முனிவராகவோ பூசிக்கப் படும் மேம்பட்ட நிலையும் ஏற்படுகிறது; நாட்டில் இத்தகைய சூழ்நிலைகள் இருந்தால், மாணவர் உள்ளத்தில் அவற்றின் தாக்குதல் விளைவுகள் மிகுதியாக ஏற்படாதிருக்குமென்று யாரே கூறமுடியும்?

இன்று மிக மட்டமான முறையில் பேசியும் எழுதியும் வரும் கீழ்த்தரச் சக்திகள் கட்டற்றுத் திரிகின்றன; அவர்களின் கருத்துக்களும் உரைகளும் பகட்டாகப் புரட்டவும் படுகின்றன. பொருளியல் துறையிலோ, மிகக் குளறுபடியான சூழ்நிலைகள் மலிந்துள்ளன. கறுப்புச் சந்தை வாணிகமும் பறிமுதல் நடவடிக்கைகளும் ஒருங்கே ஆதரவு பெறுகின்றன. இத்தகைய நாட்களில் இக்கேடான சூழ்நிலைகள் எல்லாம் சேர்ந்து மாணவர் ஒழுக்கநிலைமீது தம் நச்சு விளைவுகளைச் சுமத்தாதிருக்குமென்று நாம் நேர்மையுடன் கூறமுடியுமா?

இளைஞர் வாழ்க்கையை ஒழுங்குபடுத்தி உயர்த்த உதவும் பண்புகளில மிக முக்கியமானதும மிகவும் ஆற்றல் வாய்ந்ததும் ஆன பண்பு குடும்ப வாழ்க்கை, குடும்ப மரபு, தாய் தந்தையரின் நல்ல சூழ்நிலைப் பண்புகள் ஆகியவற்றின் தொகுதியே என்பது உண்மையேயல்லவா?

**பொதுமக்கள் தலையீடு**

மாணவர்களிடையே கட்டுப்பாட்டுணர்ச்சிக்கு மாறான செயல்களுக்குப் பொதுமக்கள் ஆதரவு தருவதில்லையா? அரசியல் கட்சி காரணமாகவோ அல்லது வேறு நோக்கங்கள் கொண்டோ பொதுமக்களிடையே ஏதேனும் ஒரு பிரிவினர் தம் செல்வாக்கைப் பயன்படுத்துவதன் மூலம் அடிக்கடி கல்வி நிலையத் தலைவரின் செயல் நடவடிக்கைகள் வலுவிழந்து போகவோ அல்லது அவை செயலற்றுப் போகவோ நேர்ந்ததுண்டல்லவா?

இங்ஙனம் நுணுகி ஆராயத்தக்க சில செய்திகளை நான் எடுத்துக் காட்டுவதனால், மாணவர் உலகத்தில் கட்டுப்பாடற்ற தன்மைக்கு நான் விளக்க ஆதரவு தருகிறேன் என்று கருதிவிட வேண்டா. ஏனெனில் நாட்டின் இளைஞர்கள் தன்னடக்கக் கட்டுப்பாட்டுப் பழக்கத்தில் நன்கு பயின்று தேர்ச்சி பெற்றிராமல், எந்த நாடும் மேம்பாடு பெறமுடியாது, எந்த நாகரிகமும் வாராது, எத்தகைய முன்னேற்றமும் ஏற்பட முடியாது என்பதை மிக உறுதியாக நம்புகிறேன். இதனால்தான் மாணவர் கட்டுப்பாட்டுணர்ச்சியின் கேட்டுக்குப் பேரளவு காரணமான

இந்தப் படுமோசமான சூழ்நிலைகள் கல்வி நிலையங்களுக்கு வெளியில் இருப்பதுபற்றி நான் மிகவும் கவலைப்படுகிறேன். என் நாட்டிளைஞர்கள் மீது எனக்கு மிகவும் உறுதியான நம்பிக்கை உண்டு. சென்ற நாற்பது ஆண்டுகளாக நான் அவர்களுடன் தொடர்பு கொண்டவனாய் வந்திருக்கிறேன். அவர்களுடன் நெருங்கிப் பழகி வாழ்ந்து வருகிறேன். சரியான முறையில் நாம் அவர்களை அணுகினால், அவர்களைவிட வாழ்க்கையின் குறிக்கோள்களை வரவேற்று ஒத்துழைக்க முன் வருபவர் வேறு எவரும் இருக்கமாட்டார்கள். உண்மையில் நாம் அனைவருமேதான் இன்னும் மிகுதியான கட்டுப்பாடுடையவர்களாய், நம் சொல்லிலும் செயலிலும் செயல் செய்யும் முறையிலும் மிகவும் கவனம் செலுத்துவதாய் இருத்தல் வேண்டும்!

நாம் இன்று வாழும் உலகம் மாறுபாடுகள் உடைய கருத்துக்களும் கருத்துக் குறிக்கோள்களும் உடையதாய் அலைவுற்றிருக்கிறது. ஒருதலைமுறைக்கு முன் பல்கலைக் கழக முகப்பு வாயில்களிலிருந்து வெளிவந்த இளைஞர்களின் வாழ்க்கை வினாக்கள் வேறு, இன்று அதே நிலையில் உங்கள் முன் நிற்கும் வினாக்கள் வேறு.

ஆயினும் நூற்றாண்டுக்கணக்காக இருந்துவந்த விலங்குத் தளைகளை உதறி எறிந்து விடுதலை பெற்றுள்ள ஒரு நாட்டைச் சேர்ந்த குடியுரிமை மக்கள் என்ற தனிப்பெருமை. இன்று உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அது வகையில் நான் உங்களை மிகவும மகிழ்ச்சியுடன் பாராட்டுகிறேன்.

### தனிநலனும் பொதுநலனும்

ஆம். இந்தியா முழுவிடுதலை பெற்றுள்ளது. ஆனால் 1947 ஆகஸ்டு 15ல் கிடைத்த பெரும்பேறு நாட்டின் விடுதலையேயன்றி நாட்டிலுள்ள தனிமனிதனின் விடுதலைபல்ல என்பதை நாம் நன்கு உணர்ந்துகொண்டு விட்டோமா? நாட்டின் விடுதலை என்றால் தனி மனிதனுக்கு அவன் விருப்பம்போல் நடக்கும் விடுதலையுரிமை குறைவு என்ற உணர்ச்சி பரவாவிட்டால், உண்மையான விடுதலை உரிமைக்கு எந்தநாடும் தேசமும் தம்மைத் தகுதிப்படுத்திக் கொள்வதென்பதும் முடியாது, அதனைப் பெறுவதும் முடியாது.

இந்தியா அனுபவ முதிர்வு இல்லாத புத்திளம் குடியாட்சிநாடு. இந்நாட்டின் பாதுகாப்புநலம் தனி மனிதன் தங்குதடையற்ற விடுதலையைப் பொறுத்து ஏற்படுவதன்று; பொதுநல அக்கரையுடன் ஒவ்வொரு தனி மனிதனும் தன்

விருப்பத்துடன், தானாகவே தன்னைக் கட்டுப்படுத்தி அடக்கிக்கொள்வதன்மூலமே ஏற்படும் என்பது இன்னும் தெளிவாக உணரப்படவில்லை.

இன்றைய உலகில் குடியாட்சி முறைக்கு அதற்குரிய வரம்பில் குறைபாடுகள் பல இருக்கின்றன; கவனிக்கத்தக்க குறைபாடுகள் இருக்கின்றன. குடியாட்சிக்குரிய விலை அசற்கான ஓயாத பொதுவிழிப்பு என்பது நினைவிலிருக்கட்டும்! தேசியத்துக்கும் அதன் வரம்பில் அதற்குரிய குறைபாடுகள் உண்டு. உன் நாட்டின் நலத்தை நீ விரும்பினால், மனித இனத்தில் நீ உனக்குரிய நற்பங்குச் செயல் ஆற்ற விரும்பினால், எல்லாக் காலங்களிலும் எல்லாச் சமயங்களாலும் நமக்கு அறிவுறுத்தப் பட்ட உயரிய தத்துவமாகிய உடன்பிறப்பு அன்புரிமை, மனித இனப்பற்று ஆகியவற்றின் நிறை ஒளியை நீ காண விரும்பினால், உன்னால் வேண்டப்படுவது மிகக்குறுகிய நோக்குடைய ஒரு தேசியமன்று, மிகப் பரந்துயர்ந்த நல்லுணர்ச்சி வாய்ந்த ஒரு உலக மனப்பான்மையே யாகும்.

குறுகிய தேசியத்துக்குரிய காலம் கடந்துபோய் விட்டது. அத்தகைய தேசியங்கள் தத்தம் நாடுகளுக்கு அழிவும் பேரிடரும் சூழ்ந்திருக்கின்றன. அத்தகைய தேசியங்களே ஹிட்லர்களையும் முஸ்ஸோலினிகளையும் தோற்றுவித்திருக்கின்றன. அந்நாடுகளின் நிலைமை தரும் பாடம் என்ன என்பது தெளிவு.

மக்களை, பெண்டிர், குழந்தைகளைப் பத்து நூறுயிரக் கணக்கில் அழித்து, மாநகரங்களை மண்ணுள் மடியவைத்துப் பாழாக்க வல்ல அழிவுப் படைக் கருவிகளைப் பயன்படுத்துவது பற்றி மக்கள் எவ்வளவு எளிதாக ஆராயாது எண்ணிவிடுகிறார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள். நம் நாகரிகத்தின் நோக்கமும் இதுவாயிருக்க முடியாது. மொத்த சமூக அழிவுபற்றிய இப் பட்டம், மனித இனத்தையே அச்சுறுத்தும். இவ்வச்சுறுத்தல், மனித உள்ளத்தையும் உள்ளச்சான்றையும் அலைக்கழித்து இழிவு படுத்தும். இக்கயமை அடக்கி ஒழிக்கப்படவேண்டுமானால், அது தேசியத்தை அதன் குறுகிய பொருளில் வற்புறுத்துவதனால் பேயச்சம் ஆகாது; அதன் அறிவொளியார்ந்த பரந்த பொருளில் அகன்ற உலக மனப்பான்மையுடன் தொடர்புபடுத்தி வற்புறுத்துவதன்மூலமே முடிவதாகும். அப்போதுதான் மனித இனம் உய்திநலம் பெறமுடியும். அப்போதுதான் அமைதிவானைக் காணமுடியும். அப்போதுதான் அமைதியொளியின் நுண்கதிர்கள் உலக நாடுகளில் பரவி ஒளிதிகழும்.

---

# தமிழ் நெடுங்கணக்கு - பெயரும் எண்ணும்

[இராவ்சாகிப், சைவப்புலவர்,
டாக்டர். தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை
L.C.P.S., L.M.S.S.A. Lond. (குற்றாலம், தென்காசி)]

## விஞ்ஞானச் சான்றுகள்—தமிழிலக்கணம்

(செந்தமிழ்ச்செல்வி—சிலம்பு உசு; பரல் ந; கசஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

இதுகாறும், தமிழ்நெடுங்கணக்கைப் பற்றிய குறிப்புக்கள் சங்க இலக்கியங்களினின்றும், சமய நூல்களினின்றும், விஞ்ஞானச் சான்றுகளிலிருந்தும் ஒருவாறு எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. பேராசிரியர் பலர் தமிழ் நெடுங்கணக்கு எழுத்துக்கள் முப்பதென்றே கொள்வர்; இன்னுஞ் சிலர், இருநூற்று நாற்பத்தொன்பது என்று பொது வழக்கிற் கூறுவர். ஆயினும், தமிழ்நெடுங் கணக்கில் முப்பத்து மூன்று (சார்பு மூன்று உள்பட) தனிச்சிறப்பு வாய்ந்த எண் என்பது பல சான்றுகளோடு, முற்பகுதிகளில் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. ஈண்டுத் தமிழ்நெடுங் கணக்குக்கும், தமிழ் இலக்கணத்துக்கும், நம் முன்னோரது பண்டைச் சமயநெறிக்கும் உள்ள தொடர்பு (Religious Connection) சுட்டிக்காட்டப்படும்.

### தமிழ் இலக்கணத்தின் மறைபொருள்

" எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு "

என்றபடி,

தமிழ் இலக்கணம், கடந்த ஐயாயிரம் ஆண்டுகளாகச், செந்தமிழ் நாட்டுக்கு ஓர் கலங்கரைவிளக்கமாக(Lighthouse)த் திகழ்ந்து மெய்ப்பொருள் வழிகாட்டியாய் நிலவுகின்றதென்பது பேரறிஞர் கூற்று. நமக்குக் கிடைத்துள்ள தமிழ் இலக்கணங்களில், தொல்காப்பியமே மிகச்சிறந்ததும் தொன்மையானதுமென்று பன்முறை கூறியுள்ளேம்; இதற்கு முன்னரே, பல இலக்கண நூல்கள் தமிழ்மொழியில் இருந்து மறைந்தன வென்பது முற்றிலும் நம்பத்தக்கது. தமிழ் இலக்கணம், வேறு மொழி இலக்கணங்களைப்போலச் சந்தி விதிகளையும், வேற்றுமை இயல்புகளையும் மாத்திரம் கூறுவதன்று; அகத்திலக்கணம், புறத்திலக்கணம் என்று வகுத்துக்காட்டிய பெருமை, நம் நாட்டிற்குத் தனிச்சிறப்பாய் இன்றும் விளங்குகின்றது. இது எழுத்து,

சொல், யாப்பு, அணி என்பவைகளோடு, பொருளிலக்கணம் என்னும் பெரும் பகுதியையும் உடையது. இதை, உலகப் பொதுஅறிவு நூலென்றே கூறலாம். ஆறறிவுடைய மக்களுக்கும், அதிலுங் குறைவுபட்ட விலங்கு, மரம், செடி, கொடி முதலியவைகளுக்கும் உண்டான தொடர்பும் வேற்றுமையும் இதில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. உலகத்தையே ஐந்திணையாகப் பிரித்து ஒவ்வொரு திணைக்குமுரிய தனி இலக்கணங்களும் வழங்கப்பட்டுள்ளன. உலகத்துக்கும், உயிருக்கும் இவை இரண்டையும் முறைப்படுத்தி ஆளும் ஆண்டவனுக்கும் உள்ள தொடர்பும் இவ்விலக்கணத்திற்றெனபடும். இன்னும், இறைவனையே, மந்திர உருவங்களாக அமைத்து, அவ்வுருவங்களுக்கு உரிய பல மந்திர ஒலிகளும், அவ்வொலிகளைக் குறிக்கப் பல எழுத்துக்களும் அமைக்கப்பட்டுள்ளனவென்றும், அவ்ஒலிகளின் தன்மையை அடிப்படையாக வைத்தே தமிழ் எழுத்துக்களும் உருப்படுத்தப்பட்டுள்ளனவென்றும் கருதுவதற்கு இடமுண்டு. தமிழ் இலக்கணங்களிற் கூறிய சில விதிகளுக்கு இலக்கிய அறிவைக் கொண்டு காரணம் கண்டுபிடிக்க முடியவில்லை. இவண் சில சான்றுகளை எடுத்துக்காட்டுவாம்.

> "பன்னீ ருயிருங் க, ச, த, ந, ப, ம, வ, ய
> ஞ, ங வீ ரைந்து உயிர் மெய்யும் மொழிமுதல்." (நன்னூல்)

மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்களில், க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங என்னும் பத்து மெய்கள் மாத்திரம் (உயிர்மெய்யாய்) மொழிக்கு முதலாய் வருவதென்னை ?

> "ஆவி, ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள, மெய்
> சாயும் உகரம் நாலாறும் ஈறே."

இதிற் கூறிய மெய்யெழுத்துக்கள் மாத்திரம் மொழிக்கு ஈறாய் வருவதன் காரணம் என்னை? த்மிழ் கற்கும் மாணவர்கள், எழுத்துக்களில் ஒரு சில, மொழிக்கு முதனிலையாய் வரலாம், மற்றவை வருவதில்லை—ஒருசில, மொழிக்கு இறுதி நிலையாய் வரும், மற்றவை வாரா—இதன் காரணம் என்னையென்று தமிழாசிரியர்களை வினவுகின்றனர். இவைகளுக்குத் தக்க விடை கிடைப்பதில்லை. 'ங, ஞ, ண, ந, ம, ன,' என்னும் மெய்களுக்கு முன்னர், அவைகளுக்கு இனமாகிய 'க, ச, ட, த, ப, ற' தானே முறையே வந்து ஒத்திசைக்கும். மற்றைய மெய்யெழுத்துக்கள் வந்து இசைவதில்லையென்று கூறுவதன் கருத்தென்னை ? குற்றிய லுகரம் கு, சு, டு, து, பு, று என்னும் வல்லின எழுத்துக்களின் மேல் மாத்திரம் ஊர்ந்து வருவதேன் ? லகரம் றகரமாயும், ளகரம் டகரமாயும் சில இடங்களில் திரிவதென்னை (லகரம் டகரமாயும் ளகரம் றகரமாயும் ஏன் திரிவதில்லை?) யகர வகரங்களாகிய

இரண்டு மெய்கள் மாத்திரம் (உடம்படுமெய்) என்று கூறுவானேன்? பதினெட்டு மெய்களில் ரகரம், ழகரம் ஆகிய இரண்டு மெய்கள் மாத்திரம் தம் முன்னே தாம் வருவதில்லை?? இங்குக் கூறிய பல தடைகளுக்குத் தக்க விளக்கங்கள், தமிழ் மாணவர்களுக்குக் கிடைப்பதில்லை என்பது எம் பட்டறிவிற் (அனுபவத்திற்) கண்ட உண்மை. இத்தகைய முட்டுகளை அறுப்பதற்குத், தமிழ் இலக்கணத்துக்குச் சமயத் தொடர்பு உண்டென்று கொண்டு சிந்தித்துப் பார்ப்போமாக.

## தமிழ் எழுத்துக்களின் வரிவடிவங்களும் தமிழ் இலக்கணமும்

தமிழ்நெடுங்கணக்கு, ஓசையையே மூலமாகக் கொண்டதென்பது தமிழ் இலக்கணத்தினின்று விளங்கும். தமிழ் எழுத்துக்களுக்கு வடிவம் அமைந்த காலம் முடிவுகட்ட இயலவில்லை. ஆனால், தொல்காப்பியம் யாக்கப்பட்ட காலத்துக்குப் பல்லாண்டுகளுக்கு முன்னரேயே இவ்வடிவம் ஏற்பட்டுவிட்டதென்பது எமக்கு வெளிப்படையாய் விளங்குகின்றது. இதை ஐயந்திரிபற நிலைநாட்டும் தொல்காப்பியச் சூத்திரங்கள் ஒவ்வொரு அதிகாரத்திலும் பல உள.

"உட்பெறு புள்ளி உருவா கும்மே" (தொல். எழுத் - க௪)

என்பது ஒன்று. மற்றொரு சூத்திரம் பின்வருமாறு:—

புள்ளியில்லா எல்லா மெய்யும்
உரு உரு வாகி அகரமோடு உயிர்த்தலும்
ஏனை உயிரோடு உருவுதிரிந்து உயிர்த்தலும்
ஆயீ ரியல உயிர்த்த லாறே. (தொல் எழுத்-கஎ)

இதன் பொருள் (சுருங்கக் கூறுமிடத்து) மெய்யெழுத்துக்கள் அகரத்தோடு கூடும்பொழுது, புள்ளி நீங்கிவிடும். மற்றைய பதினொரு உயிர்களோடு கூடும்பொழுது தத்தம் வடிவு மாறிவிடும். (உ-ம்) க் + அ = க; க் + உ = கு; க் + ஔ = கௌ. இதினின்றும், மெய்யெழுத்துக்களுக்கும், உயிரெழுத்துக்களுக்கும் அக்காலத்திலேயே (இச்சூத்திரம் தோன்றிய காலத்துக்கு முன்னரே) வரிவடிவு ஏற்பட்டு வழக்கில் இருந்து வந்தது என்று அறிவது வெளிப்படையல்லவா? "இன்னும் அவை தாம், குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆய்தமென்ற முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன" என்னும் (தொல். எழுத்-உ) சூத்திரம் ஒன்றே அக்காலத்துக்கு முன்னரேயே தமிழ் எழுத்துக்கள் வடிவு பெற்றிருந்தன என்று வெள்ளிடை மலைபோற்காட்டுகின்றது. யானை பார்க்கவும் வெள்ளெழுத்தா? இத்தகைய பற்பல சான்றுகளை (சூத்திரங்களை) மனங்குளிர மேலே எடுத்துக் காட்டுவாம்.

'புள்ளியில்லா எல்லா மெய்யும்;' 'மெய்யினியல்பு புள்ளி யோடு நிலையல்;' 'வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே;' 'எகர வுகரத் தியற்கையு மற்றே' இன்னும் இவை போன்ற சான்றுகள் பல உள. எழுத்துக்களுக்கு வடிவு தொல்காப்பியக் காலத்தி லேயே வழக்கிலிருந்தது என்று கூறுபவர் பற்பலர். 'எழுத் தாராய்ச்சியில்' தனித்த உரிமைக்குத் தகைமையுடைய உயர் திரு P. V. Manicka Naicker, B.E.M.C.I. அவர்கள் திருமொழி பின்வருமாறு: "இங்கு எழுத்து வடிவத்தைப்பற்றிக் கூறிய சான்றுகளிலிருந்து தொல்காப்பியக் காலத்தில் மக்கள், எழுத் தைக் கற்றறிந்திருந்தனர் என்பதை ஐயந்திரிபற அறிகிறோம். தொல்காப்பியக்காலம், கி. மு. நான்காம் நூற்றாண்டுக்கும் (அசோகர் காலத்துக்கும்) முந்திய தென்பதும் உறுதிப்படுத்த முடியும்."—("The few cursory references to forms in Thol-kappium place beyond doubt that writing was in vogue at the time of Tholkappium, the age of which can be proved to be not later than the 4th Century B C. distinctly prior to the time of Asoka.") வேறு சான்றுகளும் வேண்டுமோ?

## தமிழ் இலக்கணத்தின் சிறப்பு

தமிழ்நெடுங்கணக்கிலுள்ள முப்பது தனி ஒலிகட்கும் மூன்று சார்பொலிக்கும், தமிழ்எழுத்துக்கள் குறியீடாக அமைந்துள்ளன. இதன் கருத்தை விரிவாய் ஆராய்தல் ஈண்டு சால்புடைத்தாகும். மக்கள் செவிக்குப் புலனாகும் ஒலிகளை யெல்லாம் (பேச்சொலி, தனிஒலி, சார்புஒலி, கலப்பொலி,) தமிழ் எழுத்துக்களாலேயே எழுதவும், உயிர்ப்பிக்கவும் (ஒலிக்கவும்) முடியும் என்பது தமிழுலகிலேயே, பலர் அறியாத உண்மை. இதை யறியாதார் பலர், அறிய இயலாதவரும் பலர், அறிந்தும் அறியாதார்போல நடிப்பவர் ஒரு சிலர். இத்தகைய ஒலி அமைப்பு மக்கள் வாழ்வினில் எங்ஙனம் பயன்படுகிறதென்பதை உய்த்து உணர்ந்தவர் மிகச்சிலர். ஒருவாறு இங்கு விரித்துரைப் பாம்.

யாதாமொரு ஒலியை மக்கள் ஒலிப்பதற்கு, ஒரு முயற்சி (effort) வேண்டும். அங்ஙனம் ஒலிக்கும் பொழுது, அதனால், ஆற்றல் கழிவு அல்லது தளர்ச்சி (Wastage of Energy) ஏற் படுவது இயற்கை. இதன் விளைவாக மக்களது உடற்சூடும் அதி கரிக்கும் (Increase of body Temperature). உடலில் வலிமை யுள்ள இளைஞர்கள், வாலிபர்கள் இந்தக்கழிவை உணர்வதில்லை; ஆனால் வயது முதிர்ந்தவர்களும், நோயாளிகளும் உண்ணாவிரத

முதலிய பட்டினி இருப்பவர்களும், யோகப்பயிற்சி செய்பவர்களும், பேச்சின் முயற்சியால் உடலுக்குத் தளர்ச்சி உண்டென்பதை நன்கறிவார்கள். இதே கருத்திற்றுன், தனித்திருத்தல், (ஏகாந்தம், மௌனம்) முதலிய நோன்புகள் உடலுக்கும் மனதிற்கும் உறுதிதருவதாகச் சித்தர் நூல்கள் கூறும். இத்தகைய குறிப்பை, நம் முன்னோர் வெகு தெளிவாக உணர்ந்திருந்தனர். கலப்பொலிகளை யெல்லாம் வகுத்து வகுத்து அதன் மூல ஒலிகளாகிய தனி ஒலிகளுக்கும், இவைகளைவிட நுண்ணிய தன்மையுடைய சார்பொலிகட்கும் குறியீடு அமைந்திருப்பதன் பயனும் பெருமையும், வியப்பும், அளவிட முடியாததொன்றாகும். தமிழ் நெடுங்கணக்கு மெய்யெழுத்துக்களை, வல்லினம், மெல்லினம், இடையினம் என்று வகுத்ததும் இதைப் பொறுத்ததேயாகும். இவ்வகுப்பின் உட்பொருள் உணரத்தக்கது. மக்கள் எவ்வளவுக்குக் கடினமான ஒலிகளைக் குறைத்து வழங்குகின்றார்களோ அவ்வளவுக்கு, அவர்களது உடலில், பேச்சினல் ஏற்படும் கழிவு மிகக் குறைந்திருக்கும். இதையொட்டியே, யாப்பிலக்கண விதிகளும் அமைந்துள்ளன என்று எண்ணுவதற்கு இடந்தருகிறது. பரிபாடல் முதலிய யாப்புவகைகளின் இலக்கணங்களை இதினின்றும் ஒருவாறு ஊகிக்கலாம். இன்னின்ன பாடல்களில் இன்னின்ன எழுத்துக்கள்தான் வரக்கூடுமென்று வரம்புகட்டியதின் குறிப்பும் இதை யொட்டினதே போலும். வன்மையான ஒலிகளைக்குறைத்து மென்மையான ஒலிகளை வழங்குவது மக்களது வாழ்வை நீடிப்பதற்கு ஒரு கருவியாகும். இக்குறிப்பை, ஒரு எளிய சான்றினல் விளக்குதும். இரண்டு நண்பர்கள், ஒரே நாளில் ஒரேவிதமான, புது மோட்டார் வண்டியை வாங்கி, ஒருவர் நாடோறும் பத்துமைல் தூரமும், மற்றொருவர் நாடோறும் நூறுமைல் தூரமும் வழிச் செல்வார்களாயின், பின்னைய நண்பரின் மோட்டார்வண்டி, முதல் நண்பர் வண்டியைவிட அதிக விரைவில் தேய்ந்து கெட்டொழியும் என்பது இயற்கை யறிவுக்குப் பொருத்தந்தானே! இது போன்று, அறுபது நாழிகையிலும், கரடுமுரடான ஒலிகளை உச்சரித்து வருவோமாயின், பல்லாயிரம் சொற்களை நம்மை அறியாமலே நாம் மொழிந்து அதனல் ஏற்படக்கூடிய உடல் நலக்குறைவுக்கு ஆளாகின்றோம். பேச்சின் உழைப்பால் தளர்ச்சி உண்டென்பதை, சொற்பொழிவாளர்களும், பள்ளி ஆசிரியர்களும் நன்கறிவார்கள். ஆகவே, பேச்சைக் கூடியவரையிலும் குறைத்தல் வேண்டும். பேச்சின் முயற்சியால் ஏற்படும் கழிவு, தமிழ்மொழியிற்றன் குறைந்த அளவில் உள்ளது (Minimum Wastage). இச்சிறந்த உண்மையை, ஆங்கிலேயம் படித்துப் பட்டம்பெற்றும், தத்தம் தாய்மொழியின் சிறப்புக்

களை அறிய முயலாத மக்கள் ஆய்ந்துணர்ந்து பயன் பெறுவார்களாக. இவர்களது ஆராய்ச்சிக்குத்தக்க, ஒரு பேருரையை இங்குக் கூறுவோம். காளிக்கட்டம் (Calcutta), உயர் மன்ற நீதிபதி சர்வில்லியம் உட்ராஃப் என்னும் உலக ஞானியார், (The garland of letters) என்னும் திருப்பெயர்பெற்ற அவரது ஒப்பற்ற நூலின் முன்னுரையிற் காணும் சிறந்த குறிப்பு பின் வருமாறு:—"இந்தியா புண்ணிய பூமி; அப்படியிருந்தும், இந்தியாவில் நிலவும் பொருள் என்பதற்காக அதன் சிறப்பு குன்றலாமா?" என்று ஓலமிடுகின்றார். இவர் பொன் மொழிகளை நாமனைவரும் மனதிற் பதித்தல் வேண்டும்.

## தமிழ் இலக்கணமும் இசைக்கலையும்

முத்தமிழில் தலைசிறந்த இசைத்தமிழ் நுணுக்கங்களை உற்று நோக்குவார்க்கு, பாடலும் பண்ணும் இசைந்து ஒழுகுவதே தமிழ் இசைக்கலையில் இன்றியமையாததாகும். கலப்பொலிகள் ஆற்றொழுக்குப்போல, எளிதாய், அதிக முயற்சியில்லாமல், ஒன்றோடொன்று தொடர்ந்து ஒழுகி, இறைவனை, மனமார வாயாரத் துதிப்பதற்கென்றே, இலக்கண விதிகளும் அமைந்துள்ளன என்று கூறலாம். மெய்யெழுத்துக்களில், மெல்லினமும் வல்லினமும் இனம் இனமாய் இசைந்தொலிப்பது எத்தனை வியப்பான அமைப்பு! ஒவ்வொரு மெல்லினமும், தத்தம் இனமாகிய வல்லினம் பிறக்குமிடத்திலேயே பிறந்து,

> "தத்தம் இசைகள் ஒத்தன நிலையே" * (தொல். எழுத் - உ௫)

என்றாற்போல, தமக்கு இனமான வல்லெழுத்தொன்றையே தம் முன்னின்று சிவணுவதற்கு (சிவணுதல் = பொருந்துதல்) இசைவாய் நிற்பது,

> "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்னும் திருப்பாட்டிற்கு ஓர் இலக்கியமாகத் தோன்றுகின்றதென்றே கூறலாம். இன்னும் ஒரு சான்றால் விளக்குதும். மகர பகர ஒற்றுக்கள்,

> "மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்"

என்றபடி ஒரே இடத்திற் பிறக்கின்றன. மகர ஒற்றின் பின் வேறு மெய்யெழுத்து வருவது பகரம் ஒன்றே. (உ - ம்) அம்பு. பகரத்தைத் தவிர வேறு எந்த மெய்யெழுத்தும் மகர ஒற்றின் பின், வந்து பொருந்துவதில்லை. மக்கள் உள்ளங் குளிர்ந்து பாடும்பொழுது இத்தகைய அமைப்பின் தனி நயம் விளங்கும். இல்லறத்தை நல்லறமாக்குவதற்கு இதுவே சிறந்த குறிக்கோள்.

---

* (பாடம்) தத்தம் மிசைகள்.

## மறைகளும் பேச்சோலியும்

பேச்சொலி எழுப்புவதனால், உடலுக்குச் சிறு தளர்ச்சி ஏற்படுமாயின், தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி முதலிய தெய்வமறைகளைப் பாடும்பொழுது இத்தகைய கழிவு ஏற்படாதா என்பது ஒரு கேள்வி. இவைகளை உள்ளமாரப் பாடுவதிலும், மந்திரங்களை முறைப்படி உயிர்ப்பித்தலிலும், உடலுக்கும் உள்ளத்துக்கும் ஊக்கமே ஏற்படுகின்றது தவிரத் தளர்ச்சியில்லை. அஃது எங்ஙனமெனின்? இத் தெய்வீக மறைகளில் அடங்கிய தூய சொற்கள் மக்கள் உடலில் உள்ள நுண்ணிய ஆதாரங்களையும், நரம்புகளையும் (Autonomic Nervous System), கோளங்களையும் (Glands) வலுப்படுத்து முறையில் ஆற்றல் பெற்றுள்ளன. நம் முன்னோர் காட்டிய வழியும் இதுவேயாகும்.

## தோல்காப்பியமும் முப்பத்துமூன்றும்

"மூன்று தலையிட்ட முப்பதிற் றெழுத்தின்
இரண்டு தலையிட்ட முதலா கிருபஃது
அறுநான் கீற்றொடு நெறிநின் றியலும்
எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்
மெய்யே உயிரென்று ஆயீ ரியல." (தொல். எழுத் - கO௫)

(இங்கு மூன்று தலையிட்ட முப்பது = 33.) இரண்டு தலையிட்ட இருபஃது = 22. அறுநான்கு = 24 ஆக எழுத்து 46 உளவோ என்று ஐயுறுவார்க்கு, எழுத்து முப்பத்துமூன்றுமே அங்ஙனம் மொழிக்கு ஈறும் முதலுமாய் நிற்பதென்று வலியுறுத்துகின்றது. இதில் அடங்கிய சமயக்கருத்து (Religious Truth) மலைபோன்றது. தொல்காப்பிய விதியே, முப்பத்துமூன்று என்னும் எண்ணைத்தான் தனிச்சிறப்பாய் எடுத்துக் கூறியதற்கு இச் சான்று சுட்டப்பட்டுள்ளது. முன்னர் விரித்துரைப்பாம்.

## தோல்காப்பியமும் சமயமும் (Religion)

இனி, தமிழ் இலக்கணத்துக்குச் சமயத் தொடர்புண்டாவென்று ஐயப்படுவார் சிந்தனைக்குத், தொல்காப்பியத்தினின்று சில சூத்திரங்களை எடுத்துரைப்பாம்.

1. "கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே."
(தொல் - புறத்திணை. பாடாண்திணை)

2. "தாங்கரும் சிறப்பின் பல்லாற்றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே."

3. "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழிதானே மந்திர மென்ப."

மேற்கூறிய சூத்திரங்களைப்போல, தொல்காப்பியத்தில், பல இயல்களிற் பல சூத்திரங்கள் மலிந்துள்ளன. இவைகளுக்

குச் சமயத் தொடர்பான பொருளைத் தவிர, வேறு பொருள் கூறுவதற்கு இயலாதென்பதே எமது திண்ணமான கருத்து. தொல்காப்பியத்தில், தெய்வம், அறம், அருள், மந்திரம், வேலன், ஓம்படை, வழிபடு தெய்வம், மறைமொழி, கடவுள் போன்ற தெய்வீகச் சார்புடைய சொற்கள் அளவிறந்தன. திவாகரம், நிகண்டு, முதலிய நூல்களில், ஆண்டவனைக் குறிக்கும் சொற்களும் எண்ணிறந்தன. இறுதியாக,

"மாயோன் மேய காடுறை உலகமும்,
சேயோன் மேய மைவரை உலகமும்"... (தொல். பொருளதிகாரம்)

என்னும் சூத்திரத்திற் காணும் "மாயோனும் சேயோனும், வேந்தனும் வருணனும்," பற்பல மூர்த்திகளாகக் காட்சியளிக்கும் ஒரே கடவுள் தானே!

இங்ஙனமாக, கடவுட்டன்மையைச் சுட்டுவதே இயல்பாக அமைந்துள்ள தமிழ் இலக்கணமானது, திருமூலநாயனர் அருளிய திருமந்திரம்போன்று சமய உண்மைகள் (Religious Truths), நிரம்பி ஒளிரும் தூய தெய்வீகக் கருவூலம் என்று கூறுவது மிகையாகாது. திருநெல்வேலி மாவட்டத்தில், தண்பொருநை யாற்றங்கரையில் உதித்த அருட்டிரு சிவஞான மாமுனிவர், தொல்காப்பியம் கற்பதன் பயனை,

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும்—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்." (தொல்காப்பியப் பாயிர விருத்தி)

என்னும் திருவெண்பாவால், உறுதிமொழியாகக் கூறுகின்றனர். ஆதலின், இலக்கிய இலக்கணங்களைத் தெளிவுறக் கற்று, அதற்குத் தக்கபடி நிற்பவன் (நல்லோன்), பேரின்ப வீட்டைக் காட்டும் நூலின் மெய்ப்பொருள் உணர்ந்து உலகப்பற்று நீங்கி (கட்டறுத்து), 'வீடு'—இறைவன் திருவடிப்பேறு பெற்றுய்வான் என்பதுதானே இதன் தூயபொருள்!!

ஆண்டவன் நம்மைக் காப்பதனால் அப்பனையும், நமக்கு வரமளிப்பதனால் அம்மையாயும் இருக்கிறான். ஆதலின் அம்மையப்பனது அருள் கிடைத்தால், 'மீண்டும் பிறவாமை' கிட்டும்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

என்னும் தெய்வத்திருமறைக்கிணங்க, அவனுடைய திருப்பாதங்களைத் தலைமேற்கொண்டு தடுக்குங் கையையும் கொடுக்குங் கையையும் (அபயவரதத் திருக்கரங்கள்) பன்முறை இறைஞ்சி, இத் திருக் கைகளைச் சுட்டுகின்ற தமிழ் எழுத்துக்களும் உளவோ என்று அடுத்து ஆராய்வது எமது திருப்பணியாகும்.

(தொடரும்)

# திருப்புறம்பயம்

[திரு. T. V. சதாசிவ பண்டாரத்தார், அண்ணுமலைநகர்.]

**இருப்பிடமும் திருக்கோயிலும்**

திருப்புறம்பயம் என்பது தஞ்சாவூர் ஜில்லா கும்பகோணம் தாலுகாவிலுள்ள ஒரு திருப்பதியாகும். இது கும்பகோணத்திற்கு வடமேற்கே ஐந்துமைல் தூரத்தில் மண்ணியாற்றின் வடகரையில் உள்ளது. சைவசமய குரவர் நால்வராலும் பாடப்பெற்ற பெருமையும் பழமையும் வாய்ந்தது. ஊர் நடுவிலுள்ள திருக்கோயில் கிழக்குநோக்கிய திருவாயிலும் இரு பிராகாரங்களும் இரு கோபுரங்களும் உடையது; பிற்காலச் சோழர்களுக்கு முதல்வனுகவுள்ள விசயாலய சோழனுடைய புதல்வன் ஆதித்தசோழனுல் கி. பி. 886-க்கணித்தாகக் கருங்கற்கோயிலாக அமைக்கப்பெற்றது. அதுபற்றி இதற்கு ஆதித்தேச்சுரம் என்ற பெயரும் உண்டு.

**மூர்த்திகள்**

இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் சாட்சிநாதர் எனவும் அம்பிகை கரும்படுசொல்லி எனவும் வழங்கப்படுகின்றனர். இக்கோயிற் கல்வெட்டுக்கள் இறைவனைத் திருப்புறம்பயமுடைய பட்டாலகர் என்றும் திருப்புறம்பயமுடைய மகாதேவர் என்றும் கூறுகின்றன. திருஞானசம்பந்தமூர்த்திகளது திருப்புறம்பயப் பதிகத்தில் 'கரும்பொடு படுஞ்சொலின் மடந்தை' என்று அம்பிகையின் பெயர் சொல்லப்பட்டுளது. ஒரு வணிக மாதின் திருமண நிகழ்ச்சிபற்றி மதுரைமாநகரில் சான்றுரைத்த காரணத்தால் புறம்பயமுடைய மகாதேவர் சாட்சிநாதர் என்னும் பெயர் எய்தினர் என்று தலபுராணம் கூறுகின்றது.

திருக்கோயிலிலுள்ள விநாயகர் பிரளயங்காத்த பிள்ளையார் என்ற பெயருடைய சுயம்புமூர்த்தியாவர். இம்மூர்த்தியின் திருவுருவம் கிளிஞ்சல், இப்பி, சங்கு முதலிய கடல்படுபொருள்களைத் தன்னகத்துக்கொண்டு சந்தன நிறத்தையுடையதாய்த் திகழ்வதாகும். இத்திருவுருவத்திற்கு விநாயக சதுர்த்தியில் ஓர் ஆடத்திற்குமேல் தேன் அபிடேகம் செய்வது வழக்கம். அத்தேன் முழுவதும் திருவுருவத்திலேயே சுவறிவிடும். ஒரு பிரளயத்தில் இவ்வூர் அழியாதவாறு காத்தருளியதுபற்றி இப்பிள்ளையார் பிரளயங்காத்தவர் என்னும் பெயர் பெற்றனர் என்று தலபுராணம் கூறும். இவ்விநாயகர் தம்மை வழிபடும்

அன்பர்களுக்கு எண்ணியவற்றை எல்லாம் வழங்கியருளும் வரதர் ஆவர்.

இரண்டாம் பிராகாரத்திற்கு வெளியே கோபுரவாயிலுக்குக் கீழ்ப்புறத்தில் தட்சிணாமூர்த்திக்கு ஒரு தனிக்கோயில் உளது. அதிலுள்ள ஆலமர்செல்வர் திருவுருவம் காண்போர் உள்ளத்தைக்கவரும் பேரழகுடையதாகும். 'நால்வர்க்கறம் பயனுரைத்தனை புறம்பயமமர்ந்தோய்' என்னுந் திருஞானசம்பந்தமூர்த்திகளது திருவாக்கும் 'புறம்பயமதனில் அறம்பல அருளியும்' என்னும் மணிவாசகப்பெருமான் திருவாக்கும் ஆலமர்செல்வர்க்குத் தனிக்கோயில் அமைக்கப்பட்டமைக்குக் காரணமாயிருத்தல் வேண்டும்.

**தலவிருட்சம்**

இத்தலத்திற்குரிய தெய்வமரம் புன்னையாகும். அது கோயிலின் முதற் பிராகாரத்தில் உள்ளது. இரண்டாம் பிராகாரத்தில் மடைப்பள்ளிக்கு மேற்புறத்தில் ஒரு வன்னிமரம் இருக்கின்றது. வணிகமாதின் திருமணத்திற்குப் புறம்பயத்தில் சான்றுகளாயிருந்தவற்றுள், வன்னிமரமும் ஒன்றாதலின் அதற் கடையாளமாக அம்மரம் உளது, கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற சிலப்பதிகாரத்தில் 'வன்னிமரமும் மடைப் பளியுஞ் சான்றாக—முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள்' என்ற அடிகளில் இச்செய்தி குறிக்கப்பட்டிருத்தல் காண்க.

**தீர்த்தங்கள்**

கோயிலுக்கருகில் பிரமதீர்த்தம் என்ற திருக்குளமும், அதன் கீழ்ப்புறத்தில் 'சப்தசாகர தீர்த்தம்' என்ற எழுகடற் பெருங்கிணறும் உள்ளன. பிரளய காலத்தில் பொங்கி எழுந்த ஏழு கடல்களும் இறைவன் திருவாணையால் அடங்கிச் சப்த சாகர தீர்த்தமாக இவ்வூரில் தங்கியுள்ளன என்பது புராண வரலாறு. கோயிலுக்கு வடக்கே முக்கால் மைலில் கொள்ளிடப் பேராறும் தெற்கிலும் கிழக்கிலும் மண்ணியாறும் ஓடுகின்றன. மண்ணியாறு தெற்கு வடக்காகச் செல்லும் இடத்தில் தீர்த்தச் சிறப்புவாய்ந்த பூசத்துறை உள்ளது.

**தலப் பெருமை**

சைவசமய குரவருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், இத்தலத்தைச் 'செங்கண் சேவுடைச் சிவலோகனூர்' எனவும் 'எங்கள் சங்கரன் வந்து தங்குமூர்' எனவும் 'மடையெலாங் கழுநீர் மலர்ந்து மருங்கெலாங் கரும்பாடத் தேன்—புடையெலாம் மணநாறுஞ் சோலைப் புறம்பயம்' எனவும் 'கங்கை நீர்—புலமெலாமண்டிப் பொன்விளைக்கும் புறம்பயம்' எனவும்

பெரிய புராண ஆசிரியராகிய சேக்கிழாரடிகள் 'திங்கள் சூடிய செல்வர்மேவு திருப்புறம்பயம்' எனவும் சிறப்பித்துள்ளனர்.

**தலத்தைப்பற்றிய நூல்கள்**

இத்தலத்திற்கு வடமொழியில் ஒரு புராணமும் தமிழ் மொழியில் ஒரு புராணமும் உள்ளன. தமிழ்ப்புராணத்தின் ஆசிரியர் யாவர் என்பது புலப்படவில்லை. பாயிரத்தில் காணப் படும் சில குறிப்புக்களால் இதன் ஆசிரியர் கி. பி. 1801-ஆம் ஆண்டில் உடையார்பாளையம் அரசவைப் புலவராக விளங்கிய திருப்புறம்பயம் பாலசரசுவதி சுப்பிரமணியக் கவிராயராக இருத்தல்வேண்டும் என்று தெரிகிறது. புராணங்களைத் தவிர இத்தலத்திற்கு இரண்டு மாலைகளும் சிதைந்துபோன உலா ஒன் றும் இருக்கின்றன. இவை இன்னும் அச்சாகவில்லை.

**கல்வெட்டுக்கள்**

சோழர் பேரரசிற்கு அடிகோலிய விசயாலயன் புதல்வன் ஆதித்த சோழன் முதல், மூன்றும் இராசேந்திரசோழன் இறுதி யாகவுள்ள எல்லாச் சோழ மன்னர்களின் கல் வெட்டுக்களையும் இக் கோயிலிலேயே காணலாம். எனவே, சோழமன்னர்கள் எல்லோரும் இத்திருக்கோயிலைப் போற்றிப் புரந்து வந்துள் ளனர் என்று ஐயமின்றிக் கூறலாம். இதிலுள்ள 63 கல் வெட் டுக்கள் அரசினரால் படியெடுக்கப்பட்டன என்று தெரிகிறது.

**கோயில் நிர்வாகம்.**

மதுரைத் திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனத்தலைவர் அவர்கள் இக்கோயிலுக்குப் பரம்பரை உரிமையாளராக இருந்து வருகிறார்கள். இவ்வாதீனத்தின் அடியார் குழாத்துள் ஒரு வரும் சிறந்த செந்தமிழ்ப் புலமையும் நிர்வாகத்திறனும் உடைய வருமாகிய உயர்திரு. மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள் இக்கோயில் நிர்வாகத்தை ஏற்றுச் சிறப்பாக நடத்தி வருகிறார் கள். இவர்கள் இக்கோயிலுக்குப் பல வழிகளாலும் வருவா யுண்டுபண்ணிச் சிறந்த சீர்திருத்தங்கள் செய்திருப்பதும் கோயில் கிராமத்திற்குப் புதியசாலை அமைக்கச் செய்தமையும் பெரிதும் பாராட்டற் குரியனவாம்.

இற்றைக்கு அறுபது ஆண்டுகட்குமுன் கரவருடத்தில் இதற்குக் குடமுழுக்கு (கும்பாபிஷேகம்) நடைபெற்றது. இப் போது நிர்வாகத் தலைவராகவுள்ள தம்பிரான் சுவாமிகள் திருப் பணிக்குழு ஒன்றமைத்துக் கோயிற்குத் திருப்பணி செய்து வருகிறார்கள். இரண்டோர் ஆண்டில் இக்கோயிலுக்குக் குட முழுக்காகிய பெருஞ்சாந்திவிழா நடைபெறும்.

---

# ‘வாழ்மொழி விடுதலை வழங்குவீர்’

[மதியன்]

உலகில் வாழும் அலகிலா மொழியுள்
நனிசிறந் ததுநந் தமிழெனக் கூறற்
கேதுவா யமைந்த பண்புறு ஒலியும்
அமைதற் கமைந்த வனப்புறு வடிவும்

எழுத்துஞ் சொல்லு மெவற்றினு மில்லாப்
பொருளொடுஞ் சார்ந்த இலக்கணப் பொலிவும்
இற்றை நாள்வரை ஏதமின் றுவாழவும்
இன்றெழுந் தார்சிலர் வடிவை மாற்ற

முந்துறு வாரெனி லன்னவர் முயற்சி
அறிவுடம் படாத பொருளுட னமையும்
செறிவுடன் றிகழும் பண்டை இலக்கியம்
இன்று மெழுந்த பல்லெழி லுறுகலை

இன்ன பிறவும் எழுத்துமாற் றத்தால்
சிதையு மென்றுளந் தெள்ளிதி னுணர்ந்தும்
இன்னுச் செயலை விழைகுவ தெவன்கொல்
ஆயினும், மொழியை மாற்றும் உரிமை

ஆளுங் கூட்டத்தா ரடையா வொன்றும்
மொழியாய் வல்லுநீர்! பலருடம் பட்டு
இவ்விழி செயலைக் கால்கொளா தழித்து
வாழ்மொழி விடுதலை வழங்குவீர்! வந்தே.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

### அண்ணாமலைப் பல்கலைக்கழகப் புதிய துணைவேந்தர்

**திரு. ஆர். கே. சண்முகஞ் செட்டியார் அவர்கள்**

திரு. செட்டியாரவர்கள் தமிழ்நாட்டிற்கும் தமிழ்மொழிக்கும் உலகப் பொதுநலனுக்கும் ஆற்றிவரும் தொண்டுகள் அளப்பில. அவர்கள் செந்தமிழுடன் உலகப் பொதுமொழியாம் ஆங்கிலத்தையும் நுணுகி ஆய்ந்து "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாம் சொல்" என்பதற்கேற்பத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கூறும் திறலினர். நம் நாவலந்தீவு (இந்தியா) மட்டுமன்றி உலகமுற்றுமே பொருளியல்வல்லார் சிலருள் இவரும் ஒருவர் எனக் கொண்டாடிப் போற்றும் பொற்பினர்.

அறிவும் ஆற்றலும், ஆண்மையும் சூழ்ச்சியும், துணிபும் தூங்காமையும் அணியெனக்கொண்டு ஆற்றும் அருந்திறல் கண்டு முன்னாள் கொச்சி ஆட்சியின் அமைச்சராய், பின்னாள் இந்தியப் பொதுஆட்சியின் பொருளமைச்சராய் மக்களும் ஆட்சித்துறையினரும் பிறரும் தக்கவர் இவரே என உளமகிழ்ந்து ஒருங்குபோற்றத் திறம்படத் தொண்டாற்றிச் சிறந்தனர்.

இந்திய ஆட்சியின் சார்பாக அமெரிக்கா முதலிய மேனாடுகளுக்குச் சென்று அவர்களும் வியக்கும்படி எடுத்துரைத்துக் காரியம் கைகூடச் செய்தது மட்டுமன்றிச் சீரியரெனும் புகழும் பெற்றனர்.

தமிழோம்பு முறையில் சென்னை இசைத்தமிழ்ச்சங்கத் தலைவராய் உலையாமுயற்சி களைகணாக்கொண்டு ஊக்கிவருவதும், முத்தமிழ் முதுநூலாம் சிலப்பதிகாரத்துக்குச் சீரியவுரை கண்டு, வெளிப்படுத்தியுள்ளதும் பிறவும் போற்றத்தக்கனவே.

அத்தகைத் திருவினர் 1951 நவம்பர் 23-ஆம் நாள்தொட்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகப் புதிய துணைவேந்தராம் நிலை ஏற்றுள்ளார். அந்நிலை படியிலாப் பணியாம் மதிப்புக்குரிய மாண்புடையதாகும். இவர்கள் அரும் பெரும் துணையால் அக்கழகம் முன்னையினும் பல்லாற்றானும் சிறந்து உண்மை நோக்கமாந் தமிழுக்கு முதலிடந்தந்து மாணவர் அறிவும் ஒழுக்கமும் ஆற்றலும் மாண்பும் செறிந்தவராய், நாட்டுக்கு நன்மதிப்பு நல்குபவராய்த் திகழச்செய்யும் என்பது திண்ணம்.

இஞ்ஞான்று இவர்களனைய தக்காரையே உலகம் எதிர்பார்க்கின்றது. அவர்கள் வேண்டுவ செய்து மக்கள் வேட்கையினை நிறைவேற்ற ஆண்டவன் நலமும் நாளும் புலமும் திறலும் மேலும் ஈந்தருளிப் போற்றுவானாக. அவர்களும் தொண்டும் நீடுவாழ்க.

### நாளந்தா நவமகா விஹாரம், பாலி, பௌத்த ஆராய்ச்சி நிலையம்

மாணவர்களுக்கு நன்கொடைப் பன்மொழிப் பயிற்சியும், படிப்பும் நல்கப்பெறும் இராட்டிரபதி டாக்டர் இராசேந்திரப் பிரசாது 21-11-51 இல் அடிப்படைக் கல்நாட்டினார்கள். பாலிமொழி பௌத்த நூல் குறித்து நுட்ப ஆராய்ச்சி நிகழும். பீகார் பல்கலைக்கழகத்து எம். ஏ., பி. எச், டி. டி. லிட் முதலிய தேர்வுகளுக்கு மாணவர் செல்வர். திபேத்து டலாய்-லாமா

வின் நல்வாழ்த்தும் பெற்றுள்ளது. மாணவர்கட்கு ஊண், உடை உறைவு களும் அங்கேயே. கட்டடத்துக்கு வேண்டிய நிலத்தை முகமதியச் செல்வர் திரு. ஆசன் அக்பர்கான் நன்கொடையாக வழங்கியுள்ளார்.

திபேத் தலைவர் டலாய் - லாமா இக்கழகத்திற்கு மிகப்பழைமையான நானூறுக்கு மேற்பட்ட புத்த நூல்களும், புத்தர்பெருமானரின் மாற்றுயர்ந்த பொன்னாலாகிய திருவுரு ஒன்றும் நன்கொடையாக அளித்துள்ளார். நாமும் இத்தகைய பழைமையான கல்வி நிலையங்கள் பண்டையினும் சிறந்து விளங்கவேண்டுமென விழைகின்றோம்.

நம் நாட்டகத்தும் காலத்தாலும் பிறவாற்றாலும் நாளந்தாவோடொத்த 'கல்வியைக் கரையிலாத காஞ்சிமாநகரத்துள்ள' கலைக்கழகங்களும், இவற்றுக்குப் பன்னெடுங்காலம் முன்னதாவுள்ள கூடலம்பதிக் கலைக்கழகங்களும் பிறவும் பண்டுபோல் வரவேண்டுமென விரும்புகின்றோம். நாட்டு மக்கள் வேண்டுவன நல்கி நாட்டுவார்களாக.

## மனிதப் பண்பை வளர்ப்பதே மாண்புநிறை கல்வி

22-11-1951-இல் சென்னை லயோலாக் கல்லூரியின் ஆண்டுவிழாவுக்கு டாக்டர். அழகப்பச் செட்டியார் அவர்கள் தலைமைபூண்டார்கள். அவர்கள் ஆற்றிய தலைமையுரையின் பிழிவு :

மக்கட் பண்பை வளர்க்கும் செய்திகளுக்கு மிகுமுதன்மை கொடுக்க வேண்டும். இதுவே கல்வியின் நோக்கம். வாழ்க்கையின் நோக்கமுமாகும். மக்கட்பண்பைப் புறக்கணித்து அறிவியல் துறையுணர்வையே பெருக்கி வளர்த்து வருவது நாகரிக வளர்ச்சிக்கு நீக்கலாகாப் பேரிடர் விளைப்பதாகும்.

வாழ்க்கைப் பிணிப்பால் பொருள் வருவாய்க் கல்வியே சின்னாட்களாகப் போற்றிப் பயிலப்படுகின்றது. அந்நிலை பெருகியும் வருகின்றது. கலையும், பாட்டும், இசையும், பண்பும், ஒழுக்கமும், பிறவும் இல்லாமல் உலகில் எவ்வகை நாகரிகமும் எக்காலத்தும் வளர்ந்ததில்லை. இன்றைய உலகின் அறமுறைக்கேட்டுக்குக் காரணம் மக்கட்பண்புக்கு முதன்மை கொடாமல் அறிவியலுக்கு முதன்மையும் உன்னிப்பும் ஒருங்கு கொடுப்பதேயாம். இன்றைய மாணவரும் பிறரும் இக்குறையைப் போக்கி மக்கட்பண்புக்கு முதலிடங் கொடுத்து நாகரிகத்தை வளர்த்து நலம் பெறுவார்களாக.

## சென்னை உதவி மேயர் நிலைக்கு முதற்பெண்

சென்னை நகரசபை வரலாற்றிலேயே இதுகாறும் நிகழாத ஒரு வியத்தகு நிகழ்ச்சியாகும். திருமதி. அகல்யா சந்தானம் அவர்கள் உதவி மேயராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ளார். இது பெண்ணுலக முன்னேற்றத்திற்கு நல்லடையாளமாகும். இவ்வம்மையார் தொண்டு நலமுறுவதாக.

---

# மதிப்புரை

**வான் விளி :**

[கிடைக்குமிடம்: தூத்துக்குடி சைவசித்தாந்த சபை. ஆசிரியர் கோவைகிழார் இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள்.]

இந்நூல், தூத்துக்குடி "சித்தாந்தப் பேராசிரியர்" திரு. ந. சிவகுரு நாத பிள்ளையவர்களின் எழுபத்தொன்பதாம் அகவைப் பிறப்பு நாளாகிய 5-8-51-இல் வழங்கப்பெற்றது. இது பண்டைப் பனுவன்முறையில் பிள்ளைத்தமிழ் ஆகும். இதன்கண் பிறை, கதிர், கோள், மீன் ஆகிய நான்கனையும் தனித்தனி விளித்துச் சித்தாந்தப் பேராசிரியரவர்கள் செவ்வி பார்த்து ஆற்றின் நுழைந்து போற்றுதல் புரிந்து அவர்தம் வாய்மொழி அருமறை (உபதேசம்) முறையுறச் செவியேற்றுத் தூய்மை எய்தி நேயம் நீங்காது வாழ்வீராக எனக் கூறியும், அவற்றை ஒருசேரப் பொதுவாய் விளித்து மேலவற்றை வற்புறுத்தியும் யாத்துள்ள பெரும்புலம் போற்றத் தக்கது.

மேலும் ஆசிரியரவர்களின் சீரும் சிறப்பும் விளங்க விரித்துக் கூறு முகத்தான் மாணவர் பல்லோர்க்கும் வாய்ப்புடை ஆற்றுப்படையும் ஆகும். நூல் எளிய இனிய அகவல் நடையுடையது. அதன்கண் கூறியபடி பிறை ஆயிரம் கண்ட பேரருளாளராம் நிறைவுபுகழ் ஆசிரியரவர்கள் மேலும் பல்லாயிரம் பிறை கண்டு மெய்ந்நூற்பொருளை நல்லார்க்குணர்த்தி நாளும் வாழ நம்பனருளை நாடுதும் யாமே.

**நினைவு மலர் :**

[வெளியிடுவோர்: மேச்சேரி பெற்றோர் சங்கத்தார்: மேச்சேரி, சேலம்.]

இம் மலர் உயர்திருவாளர் K. A. நாச்சியப்பக் கவுண்டர் M. L. A. அவர்களின் தந்நலம் அற்ற அரியபெரிய மக்கள் தொண்டின் மாண்புறு மணமலராகும். தாளாண்மையிலும் வேளாண்மையிலும் தலைசிறந்த திருக் கவுண்டரவர்களின் நடைமுறைகள் யாவரும் பின்பற்றி நடந்து நாட்டை யும் மொழியையும் மேனிலைக்குக் கொண்டுவந்து உலகுவப்ப ஓங்கச் செய்தற்கு உறு துணையாவன.

அவர்கள் எளிய மக்களைக் கல்வியிலும் செல்வத்திலும் கூட்டுற விலும் அரசியற்றுறையிலும் முன்னேறச்செய்த வழிவகைகள் ஏனை நாட்டவரும் பின்பற்றி நடந்து மேலோங்குதற்கு உறு துணையாவன. மக்கள் செய்ந்நன்றி மறவாது அப்பெருந்தகையார் உள்ள காலத்தும் பின்னும் அவர்தம் அரும்பெரும் பெயரால் நிகழ்ந்துவரும் மாணவ நன்கொடைப்படி யும், மாணவ இல்லங்களும் தமிழர்தம் தனிப்பெரும் பண்பாட்டை விளக்கு வனவாகும்.

பொதுவாக இந்நினைவுமலர் நாட்டுக்கு வழிகாட்டியாகும். யாவரும் கற்றுணர்தற்குரியது.

**திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் உரை**

[கிடைக்குமிடம்: அ. மு. வைத்தியலிங்க செட்டியார், நெ. 15, மாலைக் கட்டி தெரு, சிதம்பரம்.]

இந்நூல் பானுகோயிலாதீனம் ஸ்ரீலஸ்ரீ முத்துகுமாரத் தம்பிரான் சுவாமிகள் தொகுத்துவைத்திருந்தது. சிதம்பரம் சைவத்திருவாளர் மூத்து. வைத்தியலிங்கச் செட்டியார் அவர்கள் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா

நினைவு மலராக வெளியிடப்பெற்றது. இச்சீரிய முறையை ஆங்காங்கு அறிவும் திருவும், ஆற்றலும் முதன்மையும், அன்பும் அருளும், ஆண்டவன் நினைவும் ஒருங்கமைந்தார் சிலர் கையாண்டுள்ளார்கள். இந் நற்பணி இன்னும் பல நற்செல்வரால் பலவாகப் பெருகவேண்டும். மேலும், திரு. செட்டியாரவர்களின் நோக்கம் சீரிய செம்பொருள் துணிவாம் சித்தாந்த நூல்கள் எங்கணும் பரவிப் பயில்வதற்கு வழிகாட்ட வேண்டுமென்பதே. அவர்களுடைய வாழ்க்கை வரலாறும் சேர்க்கப்பெற்றுள்ளது. அவர்கள் தம் வாழ்க்கையில் செந்தமிழையும் சிவனெறியையும் உடலுயிரெனக் கொண்டு ஒழுகி வருகின்றார்கள் என்பது காண யாவரும் இன்புற்றுப் பின்பற்றும் ஏற்றமுடையதாகும்.

திருவுந்தியாரின் ஒவ்வொரு திருப்பாட்டையும் தலைப்பாகக்கொண்டு அவ்வவற்றிற்குரிய சொற்பொருள் விளக்கவுரைகளும், அவற்றின் இணையாகிய திருக்களிற்றுப்படியாரின் திருப்பாட்டுக்கள் ஒன்றும் பலவும் ஆய்வுரைகளுடன் ஒருங்கமைத்து வெளியிட்டுள்ளார்கள். இது பயில்வார்க்குச் சிறந்த நலம் பயக்கும் வாய்ப்பாகும். தெளிவுறாத பல திருப்பாட்டுக்களுக்கு எளிதாகத் தெளிவுறும் வகையில் உரை அமைந்துள்ளது. சிறந்த மேற்கோள்களாகத் திருமுறை மெய்கண்ட நூல்களிலிருந்து பல திருப்பாட்டுக்கள் அமைக்கப்பெற்றுள்ளன. உரைநடை எளிமையும் இனிமையும் ஆற்றொழுக்கும் பெருமிதமும் வாய்ந்தது. செந்நெறிச் செல்வர்கள் அனைவரும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் போற்றுவார்களாக

திரு. செட்டியாரவர்களுக்கு மன்னிய பொன்னம்பலவாணன் இன்னருளால் எல்லா நலமும் நெடுவாழ்நாளும் சிவனடித்தொண்டும் மேன்மேலும் பெருகுவதாக.

**பன்னிரு திருமுறை வாரத் தோத்திரத் திரட்டு :**

[தொகுத்து வெளியிடுவோர்: திருமருதூர், சைவத் திருவாளர் தற்புருட சுப்பிரமணிய பிள்ளை அவர்கள். விலை ரூ. 0-4-6]

இந்நூல் பொதுவாக உய்யுநெறிநாடும் தெய்வவழிபாட்டினர்க்கும், சிறப்பாக நானெறி வழியொழுகும் நற்றவத்தோர்க்கும் பான்மையிலோதிப் பயன்பெறும் பண்பு வாய்ந்தது. கிழமை நாள் ஏழுக்கும் பன்னிரு திருமுறையினின்று தனித்தனித் திருப்பாட்டுக்களும், திருப்புகழ், கந்தபுராணம், பட்டினத்தடிகள், திருக்குறள் முதலிய அருள் நூல்களிலுமுள்ள சிறந்த திருப்பாட்டுக்களும் தக்கவாறு தொகுத்தமைக்கப்பெற்றுளது. தொகுத்தோரின் செந்நெறியுள்ளம் சிறந்து காணப்படுகின்றது. பெருநாவலர் - பேராசிரியர் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்களின் சீர்சால் அணிந்துரையும் ஏர்தந்து விளங்குகின்றது. இந்நல்லோர் முயற்சியைப்பின்பற்றித் திருவுடையார் பலரும் தெய்வத் தமிழ்நூல் சிலவற்றை வெளியிடுதல், வெளியிடுவார்க்கு உறுதுணைபுரிதல் முதலியன செய்ய முன்வருவரேல் நாடும் மொழியும் நலமுற்றோங்கும்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

# மாணவர் மன்றம்



காப்பாளர்.

புலவர் மயிலை, சிவமுத்து



தலைவி:

டாக்டர், தருமாம்பாள்